சதுர ருண்டோ, நற்குணமே தங்களிந்தச் சீவன்முத்தி பெறப் பிரம ஞானந் தோன்றச், சொற்குணங்கள் பிரமத்தின் குணங்க ளன்று பிரமமாஞ் சொரூபந் தானே. 168

மோகவிருள் கெடக்கோடி யருணனென வருகுருவே மொ ழியக் கேளீர், ஏகபரி பூரணமா மென்சொரூப மென்னுளத்தி லி ருகும் வண்ணம், ஆகமங்கள் சொன்னபடி யென்னையகண் டார்த் தமா வறிந்தே னையா, ஊகமுமொத் திடவுரைத்தாற் பதமரத்தி லாணிபோ லுறைக்கு நெஞ்சே. 169

சத்தேசித் தாகுமய லெனிலசத்தா மசத்தானுற் சாட்சி யெங்கே, சித்தேசத் தாகுமய லெனிற்சடமாஞ் சடங்களுக்குத் திதியு மில்லை, ஒத்தேதோன் றியசத்துஞ் சித்துநல்ல சுகமாகு மூகத் துக்கோர், வித்தேயன் னியமாகிற் சடமசத்தாஞ் சுகாநுப வம் விளைந்தி டாதே. 170

வீயாத சத்து முன்னம் விளங்குவது தன்னாலோ வேறொன் ருலோ, வாயால்வே றெனிலதுவு மசத்தோசத் தோவசத்தேன் மலடி மைந்தன், பேயாகா ரியஞ்செயுமோ சத்தெனவிப் படியதை யும் பிரித்துச் சொன்னால், ஓயாத வவத்தையாங் குதர்க்கவிகற் பங்களைவிட் டொழிந்தி டாயே. 171

சுருதியுத்தி யொத்ததுபோ லநுபவமுங் கேள்சுழுத்திச் சு கவா னந்தம், மிருதிவடி வாதலிலவ் வாநந்த மேயறிவாம் வேறங் கில்லை, கருதுபிர ளயஞ்சுழுத்தி யிரண்டிலுநீ யிருந்திருளைக் கா ண்கின் ருயே, இருதயத்திப் படிநோக்கி யேகபரி பூரணமா யிருந் தி டாயே. 172

பலகலையு முணர்ந்தகுரு மொழிந்தபடி யிவனுமநு பவம்வி டாமல், பலமலரின் மதுப்போலே சச்சிதா நந்தமொன்ரும் பர மார்த் தத்தைப், பலபொழுதுங் கண்மூடிச் சமாதியிருந் தான்வி ழித்துப் பார்த்த போது, பலவடிவாஞ் சராசரசித் திரங்களெலாந் தோன்றுமொரு படமா னனே. 173

இதயமொத்த சற்குருவே நமக்கிதுவே வினோதமன்றி யினி வே றுண்டோ, அதையுரைத்து மதைநினைத்து மிருப்பதன்றே ஞானிகளுக் கான நீதி, முதலுரைத்த துரியாதீ தமுமேழாம் பூமி யுமுக் கியமா மென்ற, பதமுமதன் வகையுமெனக் கெளிதாகத் தெளியும்வணம் பணித்தி டீரே. 174

வினவுமிடத் தஞ்ஞான பூமிகளேழ் ஞானபூ மிகளேழென் பார், இனியவற்று ளஞ்ஞான பூமிகளே ழையுமுந்தி யியம்பக் கேளாய், தனிவித்துச் சாக்கிரஞ்சாக் கிரமகா சாக்கிரஞ்சாக் கிரத் தைச் சார்ந்த, கனவுகனுக் கனவுசாக் கிரஞ்சுழுத்தி யென்றெழு பேர் கணித்தார் மேலோர். 175

முந்தவகண் டத்தெழுமோ ரறிவுமாத் திரமதுதான் முதல் வித் தாகும், இந்தவறி விற்பண்டில் லாவகந்தை முளைபோலா மிதுநனுவாம், வந்துவந்து பிறவிதொறு மகமமதை வளரு மது மகாநனுவாம், நந்துமகங் கொடுநனவின் மனோராச்சி யஞ் செயலே நனுக்க னுவே. 176

உண்டுறங்கி மனோராச்சி யஞ்செயல்சொப் பனமெனும்பே ருடைய தாகும், பண்டுகனுக் கண்டுமறந் ததைமீண்டு நினைப்பது சொப் பனந னுவாம், மண்டுமிருண் மூடுவது சுழுத்தியா மஞ் ஞான வகைகள் சொன்னேம், விண்டுநிறை முத்திதரு ஞானபூ மிகளேழும் விளம்பக் கேளாய். 177

புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சைவிசா ரணையிரண்டாம் பூமி யாகும், நலதநுமா னசிமூன்றும் பூமிசத்து வாபத்தி நாலாம் பூமி, சொலுமசம் சத்திப்பேரும் பதார்த்தாபா வனைப்பேருந் துரியப் பேரும், மலினமறு மகனேயைந் தாறேழு பூமிகளா வகுத்தார் மேலோர். 178

துற்சங்க நிவிர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச் சை யாகும், நற்சங்க மொழிவினவி ஞானநூல் பழகல்விசா ரணை யா நம்பி, முற்சங்க வேடணைகள் விடல்தநுமா னசியிந்த மூன்றி னுலும், சற்சங்க மனதினுண்மை யறிவுதித்தல் சத்துவா பத்தி தானே. 179

தத்துவத்தின் மனமுறைத்து மித்தையெலா மறத்தலசம் சத்தி யாகும், அத்துவிதா நந்தம்வருந் திரிபுடிபோம் பதார்த்தா பா வனைய தாகும், வத்துநிலை யிருந்தபடி யிருந்தமவு னசுபாவந் துரிய மாகும்,இத்துரிய பூமியைமுன் றுரியாதீ தப்பதமென் றது வுங் கேளாய். 180

முற்புவிமூன் றினுமுலகந் தோன்றுதலாற் சாக்கிரமா மூன்றற் கப்பால், சொற்பனமா மதுவுமெள்ள நழுவுமைந்தாம் பூமியே சுழுத்தி யாகும், அற்புதமாஞ் சுகாநுபவ மிகுமாறும் புவி

துரிய மதற்கப் பாலோர், கற்பனையி லாதவிட மதீதமென்று மௌனமாக் காட்டும் வேதம். 181

துரியநிலந் தனைத்துரியா தீதமெனின் மயக்கமென்று கருதி மேலோர், அரியதொரு விதேகமுத்தி யதீதமென்பா ரதுகணக்கிலாரும் பூமி, மருவுசுழுத் தியிற்காட்சி சுழுத்தியென்பா ரென்பது நீ மனத்திற் கொள்வாய், பெருமைதரு ஞானபூ மியின்விகற்பமின்னமுண்டு பேசக் கேளாய். 182

முன்னிலங்க ளேறியமூ வருமப்பி யாசிகளா முத்த ரல்லர், பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனுஞ் சீவன்முத்தர் பேத மாகும், சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே பிரமவித்தாந் தூயமுத்தர், இன்னமுமப் பூமிகளின் பெருமைதனை நீயறிய யான் சொல்வேனே. 183

நாலாம்பூ மியில்வருமுன் மூன்றுபூ மியுமடைந்து நடந்து மாண்டோர், மேலான பதமடைந்து பிறந்துமெள்ள மெள்ள வந்து வீடு சேர்வார், மாலான பவத்தில்விழார் முதற்பூமி கிடைப்பதுவே வருத்த மைந்தா, காலான முதற்பூமி கைவந்தால் முத்தியுங்கை வந்த தாமே. 184

இப்புவியி லிஞ்ஞான பூமியொன்றி லிரண்டிலடைந் திருந்தா ராலும், அப்புருடர் மிலேச்சரா கினுமுத்தர் குருபாதத் தாணை மெய்யே, தப்புரையென் றவர்கெடுவார் நடுவான மறைகளைநீ சங்கி யாதே, செப்புமொழி வழிதிடமா யகம்பிரம மென்றிருந்து தெளிந்தி டாயே. 185

பிறந்ததுண் டானு லன்றே பிறகுசா வதுதா னுண்டாம்
பிறந்ததே யில்லை யென்னும் பிரமமா வதுவு நானே
பிறந்தது நானென் றுகிற் பிரமமன் றந்த நானே
பிறந்தது மிறந்த தற்ற பிரமமா நானே நானே. 186

நானென்ற பிரம மான நானேநா னறியே னென்றால்
நானென்ப தேது பின்னை நம்முடைப் புந்தி யென்னில்
தானது மயக்கந் தன்னிற் சாகுமே சாவா தாகி
நானென நிறைந்தி ருந்த ஞானமா நானே நானே. 187

நிறைந்தவா றெந்த வாறு நிலைதெரிந் திலனென் றுயேல்
அறிந்ததாஞ் சுழுத்தி தன்னி லாநந்த மதுவே யாகும்

குறைந்ததற் காநங் தந்தான் குவலயந் தன்னி லில்லை
நிறைந்ததே யிந்த வான்மா நிதானமிவ் வறிவு தானே. 188

மனத்தினு லெண்ணித் தானே வந்ததிவ் வுலக மாகும்
நினைத்திடி லனேக லோக நிற்பதவ் வறிவி லன்றோ
அனைத்தையுங் கடந்தப் பாலு மந்தமற் றறிவி தாமென்
றெனைத்தனி விசாரித் திட்டா லேகமாய் நிறைந்தோ னுனே.

அந்தவா றிருந்து கொண்டே யாநந்த மநுப விக்க
எந்தவா றிருந்து கொண்டா லெனக்கிது தெரியு மென்னில்
இந்தமூன் றவத்தை தம்மு ளெழுந்திடும் விருத்தி நீக்கில்
அந்தவா றிருந்து நீயு மாநந்த மடைய லாமே. 190

வாதனு வசத்தி னுலே வருகின்ற விருத்தி யெல்லாம்
ஏதினு லடக்க லாகு மென்றுதான் விசாரஞ் செய்யில்
போதமா மிராசன் றனுய்ப் புந்தியைம் புலன்க ளெல்லாம்
தாதரா யிருக்கப் பெற்றுற் சகலமு மடங்குந் தானே. 191

விருத்திக ளடக்க வின்னம் வினேதமாம் யோகத் தாலே
துருத்திபோ லூது மூச்சைச் சுகமுட னடக்கி னிற்கும்
கருத்ததற் கில்லை யென்னிற் காரண சரீர மாகிப்
பெருத்ததோ ரவித்தை தன்னைப் பிடுங்கிடி லடங்குந்தானே.

காரண சரீரந் தன்னைக் களைவதெவ் வாறென் றேதில்
ஆரணம் பொய்சொல் லாதே யதன்பொரு ளகத்தி லுய்த்துப்
பூரண மாகு மென்மேற் புவனங்க டோற்ற மென்று
தாரணை வந்த தாகிற் றரித்திடு மவித்தை யெங்கே. 193

அப்படி யிருக்கச் சித்த மலைதலால் விவகா ரத்தில்
எப்படி கூடு மென்னி லென்னைவிட் டொன்று மில்லை
இப்படி கண்ட வெல்லா மென்மய மென்க னுப்போல்
கற்பித மென்று தானே காண்கின்ற சித்து நானே. 194

சித்துநா னிறைந்தோ னென்ற திடமற வாதி ருந்தால்
எத்தனை யெண்ணி னுலு மேதுசெய் தாலு மென்ன
நித்திரை யுணர்ந்த பின்பு நிற்கின்ற கனுவே போல
அத்தனை யும்பொய் தானே யாநந்த வடிவு நானே. 195

நானென வுடலைத் தானே நம்பினே னனேக சன்மம்
ஈனராய்ப் பெரியோ ராகி யிருந்தவை யெலாமிப் போது

கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே
நானென வென்னைத் தானே நம்பியீ டேறி னேனே. 196

என்னபுண் ணியமோ செய்தே னேதுபாக் கியமோ காணேன்
நன்னிலந் தனிலெ ழுந்த நாரணன் கிருபை யாலே
தன்னிய னானே னானுந் தரீயத்தை வீசு கின்றேன்
தன்னிய னின்னு நானே தாண்டவ மாடு கின்றேன். 197

வித்தியா நந்த மிந்த விதமென விளம்பி னோமே
பத்தியா லிந்த நூலைப் பார்த்தநு பவித்த பேர்கள்
நித்திய தரும நிட்டை நிலைதனை யறிந்து சீவன்
முத்தியை யடைந்தி ருந்த முனிவர ராகு வாரே. 198

ஆன்ற பதமா மூன்றற்கு மதுரீ யானு யெனும்பொருளிற், சான்ற துரியா தீதமெனுந் தடையற் றிலங்கொண் சைதனியம், ஊன்றி யுணர்ந்தோர் விகற்பமயக் கொழித்துத் தடையு மூட றுத்துத், தோன்றித் தானே தானவர் துலங்குந் தமக்கே சுவா னுபவம். 199

குலவுசற் குருவின் பாதக் குளிர்புனற் றலைமேற் கொண்டால்
உலகினிற் றீர்த்த மெல்லா முற்றமிப் றடைவார் போல
நலமையா குங்கை வல்ய நவநீத நூலைக் கற்றோர்
பலகலை ஞான நூல்கள் படித்தஞா னிகளாய் வாழ்வார். 200



## சுத்தவாதனையடைந்த
## சீவன்முத்த ரிலக்கணங் கூறல்.



### ஞானவாசிட்டம்.

#### வைராக்கியப் பிரகரணம்.

பெரியவ ரறிவுறு பெருமை சான்றது
விரிவுறு சிறியவர் மேவொ ணாதது
வரிசையி லுயர்ந்தது வசிட்ட சங்கிதை
யரியமெய்ஞ் ஞான நூ லனைத்தின் மிக்கதே. 1

தெருளுறு மகர்க்கிதஞ் செய்யு மன்பின
லருமைவா சிட்டநூற் கன்னை யொப்பளோ

வுரியதாய் பிறவியை யுள்ள தாக்குவள்
பெருமைவா சிட்டமிப் பிறப்பை மாற்றுமே. 2

பந்தமுற் றனன்பர பதத்தைச் சேர்கவென்
றந்தநிச் சய்முளா னறிவி லானலான்
சிந்தனைத் துயர்கெடச் சித்தைச் சேர்ந்துளா
னிந்தநூற் குரியவ னென்று கொள்கவே. 3

ஒருங்குணர் குரவனு முயர்வான் மீகனை
மருங்குறப் பரத்துவன் வணங்கி வன்பவ
நெருங்குவெந் துயரிலே நின்ற தெங்ஙன
மருங்குணத் திராமனீ யருளிற் கூறென்றான். 4

நல்லது சிறுவநீ யுரியை நானது
சொல்லுவன் கேட்குதி துயர்செய் மோகநீ
வெல்லலா மோகந்தான் சகத்தின் வேறன்றி
வல்லல்வா னிறம்படைத் தென்ன வந்துறும். 5

இறப்பிலா விந்தமோக மிறையுமீட் டெண்ணமின்றி
மறப்பதே நல்லதென்று மதித்துயர் மனத்தினுக்குத்
திறப்படக் காணப்பட்ட தில்லெனச் சித்தினாலே
யுறப்பெறு மெப்போதப்போ துயர்பர சுகமதாமே. 6

வழிபடு மிதனை விட்டு மற்றுள நூல்க ளென்னுங்
குழிகளிற் புரண்டஞ் ஞானக் குணத்தினாற் பிறப்போர்க் கெல்லா
மொழிவற வொருவர் செய்தற் குறித்தன்றாய்த் தானே யுண்டாங்
கழிதலிற் பரம வின்பங் கற்பங்க ளாலுங் கூடா. 7

அலைசெய்வா தனையைச் சேட மறவிட னல்ல தென்று
நிலைபெறு முத்தி யென்று நிமலமா நெறியீ தென்றுந்
தலைமையோர் பகர்வ ரன்ன திருவகைச் சநந நல்கி
யுலைதரு மலின மொன்ற தொழித்திடுஞ் சுத்த மொன்றே. 8

மடமையின் செறிவே மெய்யாய் மலியகங் காரந் தோன்றிப்
படர்தரு பிறப்பை மேன்மேற் பயில்விக்கு மலின மென்ப
ரடர்மறு சநந மென்னு மங்குர மின்றிச் செந்தீச்
சுடமுளை யாவித் தொக்குஞ் சுத்தவா தனைய தென்பர். 9

மெய்தரி நிமித்த மாகத் தரிப்பதாம் விளம்புஞ் சுத்த
மெய்தினர் பிறவி யான வனர்த்தத்தி னென்று மெய்தார்

னொய்தினி னோக்க வேண்டு நோக்கெலா நோக்கி யின்பஞ்
செய்திடுஞ் சீவன் முத்தி சேர்ந்தவ ரென்ன லாமே. 10

ஆன்றமோர் சீவன் முத்திப் பதத்தினை யடைந்தி ராமன்
பூன்றமா மனத்த னான நெறியினைப் புகலக் கேட்பிற்
சான்றவிக் கேள்வி யாலே சரைமர ணங்க டீர்தி
தோன்றலே யெனவான் மீகித் தொன்முனி சொல்ல லுற்றான்.

சதுமறை நூல்க ளியாவுந் தரித்தனன் விநோதத் தாலே
யெதுபய மென்ன வஞ்சா திருந்தனன் சின்னாட் பின்னாண்
முதுபய னதிக ளியாவு முனிவர திடமுங் காண்பான்
கதுமெனக் காத லானான் கார்நிறக் கமலக் கண்ணன். 12

தந்தைதன் சரண மான நகமெனுந் தாது பூத்த
வந்தமில் கமலப் போதை யன்னம்போ லணைந்து தாழ்ந்து
முந்தைநன் னதிக டேவ ராலய முனிவர் காண்க
ளெந்தைநின் னருளிற் காண்பா னெண்ணிய தென்ற னுள்ளம்.

முடிவிலா திரந்த தெல்லா முடிவுறு தில்லை நின்னா
லடியனேன் முன்னம் வேட்ட வாமுநீ யருடி யென்னப்
படிபுகழ் வசிட்ட னோடும் பார்த்திப னினிதி னெண்ணிக்
கடிதுபோய் மீடி யென்னக் கார்கழல் வணங்கிப் போனான். 14

தம்பிய ரோடு நன்னா ளேகித்தன் னாடு நீங்கிப்
பம்பிய நதியுங் கானும் பற்றற்றோ ரிடனும் பாலை
வெம்பிய நிலனும் வேலைக் கரைகளும் விலங்கற் சார்வும்
வம்பிய லலங்கல் வீர னோக்கினன் மகிழ்ச்சி கூர. 15

துன்னுறு மமரர் போற்ற மானிடர் துதிப்ப மீண்டு
தன்னுயர் சிவலோ கத்தைச் சார்தரு மீச னென்னப்
பொன்னுல கத்தை மேவும் புரந்தரன் புதல்வ னென்ன
மன்னுறை யயோத்தி புக்கான் மலர்சொரிந் தியாரு மேத்த. 16

நோக்கிய தேச நீதி நுவல்வுற்றுப் புலரு முன்னே
சேக்கைநின் றெழுந்து நித்த நியமங்கள் செய்துந் தாதை
நீக்கமில் சரணந் தாழ்ந்து நெடுந்தவ வசிட்டன் முன்னோர்
வாக்கினான் ஞான நீதி வாய்ந்தபல் கதைகள் கேட்டும். 17

தந்தைசொற் படியே தானை தன்னுடன் வேட்டை கண்டும்
பந்துமித் திரர்கள் பின்னோர் தம்மொடும் பருகி ராதீத்
திந்துவு மமுதும் போல நிருபருக் கினிய செய்து
மைந்துட னீரைந் தாண்டு புக்கன னனைய நாளில். 18

அருள்செய வல்லை நீயென் றரும்புகல் புகுந்தே னின்னை, வெருளுறும் புலிபோன் மொய்ம்பன் விண்ணவர்க் கிறைபோல் வீரன், மருளுறு மரக்கர் காலன் வாய்மைநின் முதன்மை மைந்தன், றெருளுறு மிராம னென்னுஞ் சிகைமுடிச் சேயை யீவாய்.

தேவரிற் றேசு மிக்க வென்பெருஞ் சேமந் தன்னு
லேவரு நிருதர் சேனை யிராமனே யெளிது கொல்லுங்
காவல சிறுவ னென்னுங் கவலையை யொழியென் போல்வா
ரோவலிற் சங்கை யான கருமத்தி னுள்ளம் வையார். 20

இபாரினு மிராமன் மேன்மை வசிட்டனு மியானு மாதி
யாரிய ரறிவே மாட்சி யறம்புகழ் வேண்டி னந்தப்
பேரிய லானை யீதி பெருமையோர் கொடாத துண்டோ
வீரிய வரக்கர் மாய்தன் மெய்யென விளம்பி விட்டான். 21

மாதவன் முனிவு நோக்கி வசிட்டனு மனுகு லத்தே
சாதனுய்த் தசர தப்பேர் தரித்தனை சபதங் காவாய்
தீதுறிற் பிறிதார் காப்பார் திருத்திநீ நிறுத்து நீதி
மேதினி கடவா தென்றால் வேந்தநீ கடக்கற் பாற்றே. 22

எரிகாக்கு மழுதென்ன விம்முனிவ னனிகாக்கு மிராமன் றன்னைச், செருவாழ்க்கை யரக்கர்செயுந் தீங்கணுகா தெனக் கேட்ட திண்டோள் வேந்த, னருள்வாய்த்த குமரனெது செய்கின்று னெனவுழைய ரங்கை கூப்பி, விரிதீர்த்த மாடிவரு நாடொடங்கி யுறுதுயரம் விளம்ப லுற்றார். 23

பதம்பணிந்து வேண்டியபின் பண்டைநிய மஞ்சிறிது பண்ணு நிற்கு, மிதந்தருமா தருநிதியு மில்லமும்பொய் யாதலினு லென்னே யென்னுஞ், சிதம்படுநற் றுகிலடிசில் சீதநீ ராதிகளிற் சிந்தை தீரு, மதந்தவிர்சந் நியாசியர்போன் மானமிராச் சியமகிழ்ச்சி மறுக்க மாற்றும். 24

மீட்டணுகா தகத்துயர்போம் விளம்பென்ன முகிற்குரலால் வெம்மை தீர்ந்து, வாட்டமறு மயிலென்ன மகிழ்ந்திடர்போ யருண்மூர்த்தி மடவ னேனைச், சேட்டமுறு மாதவநீ செப்பெனமுன் செப்புதலாற் செப்பு கின்றேன், கேட்டருடி மேலவர்சொன் மறுக்குநரியா ரெனவினிது கிளத்த லுற்றான். 25

தந்தையிவ னிற்பிறந்து வளர்ந்துபல கலைதரித்துச் சதாசா ரத்தால், வந்துயர்நன் னதியாடி வாரிதிசூழ் புவியுழன்று வருத லோடு, மிந்தநெடுஞ் சகமோகத் திச்சையெலாந் தீர்ந்ததிதி லின்ப மில்லை, யந்தமுறல் பிறப்பதற்கே பிறப்பதுமீட் டிறப்பதற்கே யநித்த மியாவும். 26

பாவமதா யாபத்துப் பயிலிடமாய்த் தம்மிற்றும் பற்றின் றூ யுந், தாவுமனக் கற்பனையாற் சம்பந்த மாயிருப்புச் சலாகை போ லா, மேவுபெருஞ் செல்வத்துக் கிடமாகு மெய்ப்பொருளும் விட யத் தானும், பூவலயத் தானுமெது பயன்யாமார் வருவதெது பொய்பொய் பொய்யாம். 27

யாதியார் பெற்றதென விவ்வண்ண நினைவேற்கு வழிச்செல் வோர்க்கு, மோதுகா னலிலம்பு முறைமைபோற் பொருண்முழு தின் மூளா வாசை,பேதியா வித்துயர்போ நெறிநாடிற் பெருந்தரு தான் பெற்ற தீயால், வேதல்போல் வேகின்றேன் விடாரடைகல் லாந்திறவா வெய்ய மோகம். 28

இனமிகழு மென்றஞ்சி யித்துயருக் கழுதாற்றே னீன்ற மாதர், தனமுதலா மாபத்தோர்க் கெனச்சிந்தா வினஞ்சுழலுந் தான மாகுங், கனமிலதா முதாரமதா மென்னினுமின் பம்பய வாக் கயவ ரென்ன, வனகரெனத் தரமறியா தரசரைப்போ லடைந்தார்பா லணுகுஞ் செல்வம். 29

கருமவகை யால்விரிந்த கட்செவிப்பால் விடமாகுங் கண க்கே போலாந், திருவெனுஞ்சூ றைக்காற்றுற் பனிபோலச் சித றாரார் சேரார் சேர்ந்தோ, ரிருவகைக்குங் குளிர்ந்தினியர் நன்றி யறி வோரறிஞ ரினியோர் சூரர், பொருவிலெவ ருந்திருவாற் புழுதிசெறி சுடர்மணிபோற் புன்மை சேர்வர். 30

தீதடையாச் செல்வர்மொழி திறம்பாத சூரர்நடுத் தெரிந்து நோக்கு, நாதரிவர் மிகவரியர் நாகஞ்சூழ் குழிவல்லி நனைபோற் செல்வஞ், சாதனத்துக் கரிதுளத்தை யிழுத்திமைப்பி லிறுந் தலைகீழ்த் தளிரி னுன்ற, வோதுதுளி யொத்தவுயிர் மத்தரென வகாலத்தி லுடல்விட் டோடும். 31

வளர்புலமா மராத்தீண்ட மனமயர்வோர் மெய்யுணர்வு வாய் த்திலாதோர், தளர்வுறுகா ரணம்வாணுட் டனிமோக மெனுமுகி லிற் சார்மின் போலு, மளவுபடு முடன்மெய்யென் றழுந்திநா

மிதின்மகிழ்ே மாகா யத்தைப், பிளவிடவா யுவைப்பிடிக்கத் திரை கோக்க வெளிதிதனைப் பேண வொண்ணு. 32

சரற்பருவ மேகமெனத் தைலந்தீர் விளக்கென்னத் தரங்க மென்னத், திரப்படநீங் குவதாகிச் சிறிதுமிளைப் பாருத சிந்தைத் தாகிப், பரப்புடைய் சேட்டையதாய்ச் சூனியமாம் வாளுளின் பயனை நாடிற், றுரப்பரிய துயராக்கு மொட்டகத்துக் குயிர்தொலைக்குஞ் சூலே போல. 33

அடையவேண் டியதடைந்து மேற்றுயர மற்றின்ப மளவிலாதாய்க், கடையதாங் தருவிலங்கு பறவைகள்போல் வீணுள்கள் கழியா தாகித், தடையிலா மனனத்தால் வாழ்வதே யுயர் வாணுள் சனனந் தீர்ந்தோ, ருடையபிறவு புயர்ந்ததாங் கிழவேசரிப்பிறப்பா மொழிந்த வெல்லாம். 34

அவிவேகிக் குப்பாரஞ் சாத்திரமெய் யறிவிலோர்க் கங்கம் பார,நவில்சாந்தி யில்லாதோர்க் குளம்பார மவாவினர்க்கு ஞானம் பாரஞ், செவிதான வுருவாணுண் மனம்புந்தி யகங்காரஞ் செயல்களெல்லாங், குவிபார மாஞ்சுமடர் சுமைபோலப் புந்திநலங் கூடாதார்க்கே. 35

மனத்துயரு மாபத்தும் வளர்தொழிலு மகங்கரத்தால் வருமித் தைப்போற்,கனத்தபகை யிலதுநெடுங் காலம்வினை யிதுசேர்ந்து கலங்கா நின்றே, னனத்தொடுதண் ணீர்நுகரே னரும்போகம் விளம்புவதென் னகங்கா ரஞ்சேர், தினத்தொழில்க ளோமமுண வனைத்தும்பொய் யகங்காரந் தீர்தன் மெய்யே. 36

அகங்கார முகில்படர வாசைமலே மல்லிகையவ் வளவிற்ருகு, மிகுந்துயரிவ் வகங்காரத் தொழில்பிரிந்தும் பேதைமையின் மிகவு நொந்தேன்,செகந்தனிலா பத்திடமாய்த் திரந்துறப்ப தாயுள்ளாய்த் தியக்க மாயு, முகந்தவிசா ரமுமுணர்வு மிலாவகங்காரம்போமா றுபதே சிப்பாய். 37

காதலெனு மனைவியின்பின் செல்கின்ற மனமென்னுங் கடிய ஞாளி, பேதைமைமே வியவென்னைப் பிணந்தின்னு மாறுபோற் பிடுங்கித் தின்னு, மோதுபெருங் காற்றினுன் முறிந்தெழுந்த துரும்புபோன் மோக மெய்த, வாதைமனம் பெரும்பாழின் மிக வீழ வதிதூர மலங்கத் தள்ளும். 38

கடுமனவன் பேய்கனலிற் கொடிதாகு மலைகளினுங் கடத்தற் கொண்ணு, நெடுவயிரத் தினும்வலிது கடல்பருகி மேருவினை நேரே பேர்த்துச்,சுடுகனலை விழுங்குகினு நிறுத்தரிது புலன்முழு துந் தோன்று மூலங், கெடுமுலகி துண்டெனி லுண் டிலதாகி லில திதனைக் கெடுத்தல் வேண்டும். 39

வரையிலெழு வனம்போல மகிழ்ச்சியிட ரிவையனைத்து மன த்திற் றோன்றும், புரையில்விவே கத்தின்மனம் பொன்றிலவை பொன்றுமெனப் புந்தி செய்தேன், கரைதலறு மோகமெனுங் காரிருளிற் றெழிற்கடங்காக் காத லல்லா, லுரைதருகா மாதிக ளா முலாகநிரை யுணர்வெனும்வின் னுலாவு மன்றே. 40

ஆதரித்த நற்குணங்க ளாகுவினுற் றந்திரிபோ லாசை யாலே, சேதமுறுஞ் சொரூபநிலை செறிதரவல் லமையில்லாச் சிந்தை யேங்கண், மீதுவலை யுறுபுட்போன் மெலியவரு மாசைத்தீ வெது ப்ப நொந்தேன், கோதிலமு திற்குளித்துங் குளிராதென் றென் மனத்திற் குறிக்கின் றேனல். 41

பின்னுறுபக் கத்திருள்போற் பேராண்மைத் தீரரையும் பீதி செய்யும், நன்னயனங் குருடாக்கு முபசாந்தத் தோர்தமையு நடுக் கஞ் செய்யுங், கின்னமுறு காதலெனுங் கிழமடந்தை யொருபொரு ளுங் கிட்டா தேனு, மின்னிதிய நயந்தெவர்க்கும் பின்றொடரு மனோரதமு மெய்தா தாகும். 42

முதிர்பருவத் தளர்ச்சியான் முடியாத நடனகதி முயல்வா ளாகி, மதிமகிழ்ச்சி யறநடிக்கு மாடுங்கூத் தியைப்போல வருத்து மாசை, யெதிர்கிடைத்தற் கரும்பொருளிற் சென்றெய்து மமைந் தா லு மின்பந் தேடுங், கதியறவோ ரிடத்துறையா துலைகின்ற வானரம்போற் காத லானே. 43

காவின்மதர் வண்டென்னப் பாதலம்விண் டிசையனைத்துங் கணத்து லாவும், வாவிவளர் மயலொன்றே வருத்தமனைத் தினும் பெரிய வருத்த நல்கு, மேவுமா னுறைபவர்க்குந் துயர்செய்யு மாசையெனும் விடூசி கைக்குத், தேவர்புகழ் மந்திரமாஞ் சிந்தை யற லுலகிடர்போஞ் சிந்தை யற்றால். 44

பைந்தொடியா ராசைநோய் கெம்பீர மனிதரையும் பதுமந் தன்னை, முந்திரவிக் கதிர்போலு மிளிர்விக்குங் கனவிடியின் முனை கூர் வாளும், வெந்தவிருப் புப்பொறியு மெனக்கொடிய மனவேட்

கை மேரு வொத்தோர், சுந்தரஞா னியர்தீரர் சூரரையெல் லாமி மைப்பிற் றுரும்பு செய்யும். 45

ஈரித்த குடனரம்பாற் செறிந்துபல விகாரியா யிரங்க வாடிப், பூரித்த வுடல்பிறப்பிற் பொலிந்தாலுந் துன்பத்தின் பொருட்டே யாகும், பாரித்த சிற்றின்பஞ் சிறுதுன்ப மனுபவிக்கும் பகர்ந்த மெய்போ, னேரிட்ட குணமிலதுந் துயருளது நீசமுமா நிலேவே றுண்டோ. 46

அற்பமதாஞ் சுகாசுகத்தி லழுந்துமுட னிலேயெனினு மழி வென் றுனு, நற்பலமென் னகங்கரனுக் ககமாகிப் பொறிபசுக்க ணலோ டாறுங், கற்பனைசெய் மனத்தொழும்பு ம்ாசைமனே வியும்வாயாங் கடையு மாங்கே, பற்பலபல் லென்புகளாந் தோர ணமு நாக்குரங்கும் பயின்று தோன்றும். 47

நிதியுமா சுஞ்செயனு மிவ்வுடம்பும் வேண்டுவன நிற்கி னன் றே, விதியில்வரு காலனுற் சிலநாளி லிவையெலாம் வீந்து போகு, முதிரமொடு தசையுடைத்தா யுடைவதிபல் பாய்த்தாழ்ந் தோ ருயர்ந்தோ ரொத்தே, யதிகசரா மரணமுறுந் தரமறியா திவ் வுடலி லழகென் கொல்லோ. 48

மின்னிடத்திற் சரற்கால மேகத்திற் கந்தர்வ வியன்மூ தூரி, னன்னிலேமை யெண்ணுவோ னெவனவனே யுடனிலேமை நாடு கிற்போன், மன்னுகிலா தசைந்துபல தொழிற்றரங்கஞ் செறி பிறவி வாரி தன்னி, லென்னபிறப் பெய்துகினு மிளமைமிகு துய ரத்துக் கேது வாகும். 49

தொலேவறுமா பத்தெளிமை சொல்லின்மை மடமாசைத் துவட்சி யெய்தி, யுலேவறுசை சவத்துடனே யுலேயியல்பா மனங் கூடி யோத நீரி, னலேமடவார் விழியனலின் கொழுந்தொடுமின் னிவைக்கெல்லா மலேவு கற்பித், தலேதலுறு நாய்போல மலமரு ந்து மற்பத்தான் மகிழும் வாடும். 50

மண்ணுகரும் விண்மதியை வரவழைக்கு மிம்மடமை மகிழ்ச் சியாமோ, நண்ணுகுரு தாய்தந்தை யுற்றோர்மூத் தோரெவர்க்கு நடுக்கங் கூரும், புண்ணுறுசை சவம்பயத்துக் கிடமாகுங் குற்ற மெலாம் பொதிந்த கூடா, மெண்ணுமவி வேகவிடன் வாழ்மனே யாம் யார்க்குமிதி லின்ப மெய்தா. 51

இப்பருவத் தார்த்தமகன் றிடரில்வீ ழெவ்வனத்தி லேறி நெஞ்சா, மொப்பரிய பொர்றிலுறை காமனெனும் பேயறைய வுள் ளம் வாடுஞ், செப்பரிய விரிவுடைத்தாய்த் தெளிந்துபரி சுத்த மாய்ச் சிறந்த தேனு, மைப்புயனு ணதிநீர்போன் மதிகலங்கு மெவ்வனத்தின் மயங்கு நாளில். 52

கருத்தெனுமான் மருண்டோடி விடயமெனுங் குழியில் விழக் காய மென்னு, மருத்தலத்தி லெவ்வனமாங் கடுங்கான லெழுந்துமிக வளரா நிற்கும், பெருத்ததுய ரிளமைநல மெவ்வள வுண் டவ்வளவும் பெருகா நிற்கு, மருத்திகளு மெவ்வனமவ் வள வும்விரைந் தெழுந்துமிக வர்த்தஞ் செய்யும். 53

எத்திறத்தோ ரெவ்வனமாமிடையூற்றைக் கடந்தெளிதி னே றவல்லோ, ரத்திறத்தோ ரேபுருட ரவர்களே தொழற்குரியோ ரவரே சான்ருேர், மெய்த்திறத்தோர் சேரிடமாய் விநயநிதி படைத்தருளால் விளங்கா நிற்குஞ், சுத்தகுண வெவ்வனமிவ் வுலகினுள தோவிசும்பிற் சூழ்கா டுண்டோ. 54

சந்துறு நரம்போ டென்பு தசைசெறி பாவை யொப்பா
ரெந்திரத் தியங்கு மங்க பஞ்சரத் தினிமை யென்னே
கந்தமென் குழலார் கண்ணிற் ருேறசை கண்ணீர் புண்ணீர்
சிந்தையிற் பிரித்து நோக்கிற் சீசிதேன் மோகஞ் செய்வாம். 55

மேருவின் குவட்டின் வீழும் விரிதிரைக் கங்கை நீர்போ
லாரமுற் றிலங்கு கின்ற வணியிழை மடவார் கொங்கை
யூரயன் மயானந் தன்னி லுற்றபோ தருண்டைச் சோற்றி
னேருறு கவளம் போல நிரைநிரை நாய்க டுய்க்கும். 56

மேவுதற் கரிதாய்க் கேசம் புகையதாய் விழிக்கு நன்காய்த்
தீவினைச் சிகைசேர் மாத ரெனுங்கனற் றிரணம் போல
யாவரைச் சுடாது தூரத் தெரிகின்ற நரகத் தீக்குப்
பாவையர் குளிர்ந்த மேனி பசையிலா விறக தாமே. 57

மாமடஞ் செறிந்த நெஞ்சின் மனிதராம் புட்பி டிக்கக்
காமனும் வேடன் வீசும் வலையொப்பார் கருங்கண் மாதர்
தீமனச் சேருர் சன்மச் சிறுகுழி மீனு மாந்தர்க்
கேமவா தனைக்க யிற்றுத் தூண்டிலுக் கிரையு மொப்பார். 58

முதுதுயர் விலங்கு மாகி முடிவில்கா மாதி யென்னும்
புதுமணி வைத்த செப்பாம் பூவைய ரின்பம் வேண்டே

ணிதுதசை யிதுநெய்த் தோரென் பிதுநரம் பிதுவென் றெண்ணில்
விதுமுக மாதர் வேட்கை விரோதமாஞ் சிறிது நாளில். 59

பாரியை யுடையோன் யாவ னவனுக்கே பற்றும் போக
நாரியை யில்லா தார்க்குப் போகத்தி னலமெங் குண்டாங்
காரிகை தன்னை நீங்கிற் கருத்துறு சகத்து நீங்கும்
பேரியல் சகத்து நீங்கிற் பிரிவில்பே ரின்ப முண்டாம். 60

வந்துறு போதி னன்றுய் வரியளிச் சிறகு போலச்
சந்ததஞ் சலித்துத் தள்ளற் கரியதாம் போகந் தன்னை
முந்துநோய் மரண மூப்பு முதலவாந் துயர்கட் கஞ்சிச்
சிந்தையில் விரும்பே னெங்ஙன் சேர்வரும் பதத்தைச் சேர்வேன்.

ஈறறு சைச வத்தை யெவ்வனம் விழுங்கு மித்தை
மாறுறு சரைவி ழுங்கு மயக்கநோய் வருத்த மிக்க
பேறுறு சரைகைக் கொண்டாற் போறி வகன்றிட் டோடும்
வேறுறு மணங்கான் முன்னை மெல்லிய லகனு மாபோல். 62

புரையுட னெகிழ்வு சோர்வு பொருந்திய லோபந் துன்பங்
கரையுறு கருமந் தன்னில் வலியின்மை கடுநோய் தோற்றம்
வரைபொருள் செயமாட் டாமை மைந்தரே முதலோர் நிந்தை
சரைநரை வருகா லத்துத் தருந்துயர் விவித மாகும். 63

விருத்தராய் நடுக்கு வோரை மித்திரர் மைந்த ருற்றார்
கருத்துறு மாதர் தாசர் நகைசெய்வர் காணு ணுதாய்
வருத்தமுஞ் சரையு முற்று வலிகுண மிழந்த மூப்பை
யருத்திவந் தடையுங் கட்டை மரங்கழு கடையு மாபோல். 64

குற்றமு மிளைப்பு மேவிக் குறிதன்றி யுளத்தைச் சுட்டுத்
துற்றவா பத்துக் கெல்லாந் தோழியா மாசை துன்னு
முற்றதோர் பரலோ கத்துக் குறுதியே தென்று மூப்பிற்
பற்றுறு பரிகா ரந்தீர் பயமிகப் படரு மன்றே. 65

ஆதரச் செருக்கு மல்கு மருந்துதற் கரிது மூப்பிற்
காதல்செய் வலியி லாமை கருத்தெலாம் வெந்து சோரும்
போதுறு நீரூர் முற்றற் பூசினைப் பெருங்காய் போல
மேதகு காலன் மாந்தர் வெண்ணரைத் தலையைத் தின்னும். 66

மரணமா மன்னன் முன்னர் வருநரைக் கவரி வீசித்
திரளுறு வியாதி யாதி யாகிய சேனை செல்லுங்

தரமறு நரைவெண் சாந்தார் சரீரமா மனைக்கு ளாபத்
துரவலி யின்மை சோர்வா மொண்டொடி மகளிர் வாழ்வார். 67

நரையுறு தீவா ணுளாம் பேயுட னண்ணி வாழ்வென்
சரைவெலற் கரிதி யார்க்கு மீடணை மூன்றுந் தள்ளு
நிரைபவத் தவிளை யாகி நிகழின்பப் பொருள்க ளெல்லாம்
புரையுறு மெலியா னூல்போற் காலனாற் பொன்று மன்றே. 68

மகரநீர் கடல்கு டிக்கும் வடமுகக் கனலே போலச்
சகலமும் விழுங்குங் காலன் சகத்திடை விழுங்கா தில்லைப்
புகலரும் பெரியோ ரேனும் பொழுதொரு கணமுந் தாழா
னகிலமும் விழுங்கித் தானே யகிலமாய் நிற்கு மன்றே. 69

விழுமியர் சுபத்தின் பலர் மேருவை யொப்போ ரெல்லாம்
பழுதறு கருடன் கொல்லும் பாம்பெனக் காலன் கொல்லும்
புழுதியோ டிலேது ரும்பு பொன்மலை புணரி வெள்ளஞ்
செழுமயேந் திரமுங் காலன் சிதைத்துத்தன் வடிவ மாக்கும். 70

அகல்பூதக் கொதுகிரையு மண்டமெனுங் காயுகுத்த வத்தி யாயும், பகலவனே கண்ணாகப் பகற்பொழுது பார்வையாற் பதங்கள் பார்த்துச், சகமெனுந்தொல் வனத்துலக பாலரெனும் பழம் பரித்துத் தானே தின்னுந், திகழுலகா மணிமாலைக் குணமூன் றாற் கோத்தணிந்து சிந்துங் காலன். 71

சிறியசகப் பழங்குடிலிற் சிதறுலக மணியமனுஞ் செப்பிற் சேர்க்கு, மறிவில்பல பூதமாம் விலங்குகளும் பறவைகளு மளவற் றெங்கு, முறியவுலர் சகப்பாலை தனில்வேட்டை யாடிநெடு முனு கற் பத்திற், பொறிவடவைத் தாமரைசேர் கடல்விளையாட் டோ டைகளாப் பொருந்துங் காலன். 72

கைப்பினொடு புளிப்புக்கார்ப் பிவைமுதலாஞ் சுவைபடைத்த கனபூ தத்தா, லொப்பரிய பாறயிரை யாதியாய் வருகின்ற வுததி தன்னாற், றுப்புடையன் விவிதமாந் தோற்றமுள சகங்களினாற் சுற்றிச் சுற்றி, வைப்புடைய வவற்றவற்றும் பெருங்கற்பம் பலகா லும் வட்டஞ் செய்யும். 73

தொல்லுலகிற் றோன்றுகின்ற சராசரமாம் பொருளனைத் துந் தொலைத்து மாற்றி, வெல்லரிய சங்கார காளராத் திரிமிகவும் வெருட்சி மிக்க, வல்லபமா நடையுடைத்தாய் மாதர்கண மனைத்து

முடன் மருவப்பட்டு, புல்லரிய சகமோகப் பொறிவனத்திற் புலிப் பேடு போல வாழும். 74

படர்பூதந் தொலைத்திரதம் பயில்புவியாம் பானபாத் திரங் கைப் பற்றி, மடல்சூழுற் பலங்கழுநீர் வனசமென வுலகநிரை மாலை சூடி, விடுகோடை யிடிநகைக்கு நரவரியை விளையாட்டு விகங்க மாக, நெடுநீள்வன் புயமாம்பஞ் சரத்தினிடை யேந்து கின்ற நெறிய ளாகி. 75

மன்னுசரற் ககனம்போன் மாசின்றிச் சுரவீணை மதுர மேவி, முன்னுயர்கா லனைக்கேளீஇக் கோகிலக்குஞ் சாக்கொண்டு முழுது மின்மை, பென்னுமடற் சிலைதாங்கி யெழுதுயரா கிய கணைக ளேந்தி யெங்குந், துன்னுநட னம்புரிந்து தன்வசமாய் மிகவிளங்கிச் சுற்று நிற்கும். 76

பொன்னுலகு தரியணியாம் புணர்பாவ மெனுநூலாற் பூட் டிக் கட்டும், புன்னரகச் சிலம்புகளைப் பாதலமாம் பதத்தணியும் பானுத் திங்க, ளென்னுமணி சேரிமவா னெனுமென்பு மணி மேரு வென்னும் பொற்பூண், டன்னிருகா தினுந்தரிக்குஞ் சக்கர வெற் பணிகலையாத் தழுவு மன்றே. 77

பின்னுறத்தாழ்ந் தலைந்திலங்கு முருகன்வா கனமயிலின் பீலி சூடு, முன்னயனப் பெருங்குழிகள் பயஞ்செய்யு மதிச்சடைதாழ் முடிகள் பூணுங், கன்னியுமை குழற்கவரி மலைநிகர்பை ரவசாடுங் கவந்த மேவும், பன்னயனக் குழிவிளங்கு மிந்திரன்றன் மேனி யெனும் பலியோ டேந்தும். 78

மிகவுணங்கு சாரீர கட்வாங்கப் பங்குகளால் விளக்கந் துன்று, மகமுடைத்தாய்த் தனைத்தானே பயஞ்செய்து புவன மெலாந் தொலைத்து மாற்று, மகிலமுமா மொருவடிவின் முடி வட்ட மெனுங்கமலத் தலங்க லோடு, நிகரினட னம்புரிந்து பெருங் கற்பந் தனில்விளங்கா நிற்கு மன்றே. 79

பொருள்களெலாம் பொருளன்றாங் கடியமன மகங்காரத்தின் பொருட்டே யாகுந், தெருளுறுபா வங்களெலா மபாவமாம் பவ முடிவு தெரியா தாகு, மருளுமதி யாகுலத்தா லுளம்வெதும்பு மாசைநோய் வளரா நிற்கு, மிருண்மயநீர் பவரரிய செவ்வனந் தான் வருத்தத்தா லேகா நிற்கும். 80

கொண்ட பாவனை பிறவியாம் பூதங்கள் குலைந்துபோந் திசை தோன்று,கண்ட தேசங்கள் பிறசொலாத் திரிந்திடுங் கனகிரி துக ளாகு, முண்டெனுந் தன்மை விழுங்கிட வுலகுபோ மும்பர்போம் புவனம்போ, மண்டு வாரிபோ முடுக்கள்போந் தானவர் வானவர் கணம்போகும். 81

சித்தர் பொன்றுவர் துருவனுஞ் சிதைகுவன் சிவனயன் றிருமார்பன், றத்து வந்தனி லொன்றுவர் காலமுந் தருமமு முடிவாகு, மத்த வானும்போ மயக்கமே தருவதாய் வாக்கொடு செவிக்கெட்டாச், சுத்த மாம்பொரு ளொன்றினு லிகழ்வுறத் தொல்லுல கிழிவாகும். 82

இன்ன போதுமங் கலங்களா மிருதுவீ தியாத்திரைக் கிது கால, மன்ன தேயுற விச்சுக மிருந்தவா வற்புத முளபோக, மென்ன வென்னவா ளாநினைத் துலகங்க ளிறக்கின்ற வுயந் தோரை, யுன்னி முந்துறப் பகலெலாந் தேடிடா தொழியுமேற் றுயி லுண்டோ. 83

மனைவியு மகாரும் பொன்னு மமதைசெய் தமுதம் போல
நினைவினு னேயஞ் செய்து நீணிலத் துள்ள வெல்லா
மனையவர்க் காகச் செய்வ ரருத்திக ளான வெல்லாம்
வினையுற முடியுங் காலை விடங்களின் மயக்கஞ் செய்யும். 84

பகையெலாந் துரந்து தள்ளிப் பாக்கியம் பலவந் தெய்த
விகலறத் துய்க்கு நாளி லெவ்விடத் திருந்தோ வந்து
மிகையறு காலன் கொல்லும் விவிதமா மிடத்தி னின்று
வகுந்தின்வந் தொன்று வார்போன் மனைவிசேய் முதலா மாயை.

கற்பமாங் கணகா லத்திற் கமலயோ னிகளு மாய்வர்
சிற்பமாங் கலைக ளாலே செறிந்தகா லத்தின் சால
வற்பமு மகத்து நாடி யளப்புறு புந்தி பொய்யாம்
பற்பல நீதின் மாலும் பயிலுமன் னுயிர்க ளெல்லாம். 86

கற்றவ ரரியர் சாலக் கருமமுந் துயரி னாலே
யுற்றரு ளியமா மெல்லா முயிர்தரித் துழல்வ தெங்ங
னற்றவத் தினமு மேலாஞ் செல்வமு மந்தச் செய்கை [வோம்.()
முற்றுமாய்ந் துளத்தே தோன்று மியாமுமம் முறையிற் செல்

பிணிசெயா பத்துச் செல்வம் பிறப்பிறப் பென்ப வெல்லாங்
கணிதமாங் கணத்திற் போகா தனவில்லைக் கடிய சூரன்
றுணிவனே ரேழை யாலே நூறுட றுணியு மொன்றூற்
பணிதரு கீழோர் மேலாம் பலவட்டம் வருமிவ் வாறே. 88

அனையகுற் றங்க ளாங்காட் டெரியினு லறவும் வெந்த
நினைவினீ ரிற்கா னற்போ னெடியபோ கங்க டோன்று
வினையுறு மரணம் வாழ்வு ளிரண்டையும் விரும்பு கில்லே
னினையதோ ரிடரு மின்றி யிருந்தவா றிருக்கின் றேனல். 89

தெரிவுறு வயதில் வந்த புந்தியாற் சித்தந் தன்னைப்
பரிகரி யாது விட்டாற் பரிகரிப் பதுமற் றெந்நாள்
விரிவிடம் விடம தன்று விடயமே விடமாந் துன்பம்
புரிவிடங் கொல்வ தோர்மெய் புலன்மறு பிறப்புங் கொல்லும்.

மகிழ்வுசேர் வுறவு சார்வு வாழ்வுசா வென்ப வெல்லாந்
திகழ்வதா மறிவு சான்றோர் சிந்தையிற் பந்த மாகா
புகலுறு மாயு வாயுச் சிதறிய புயனீ ரொக்கு
நிகரறு போக மேக மிசையெழு நெடுமின் போலும். 91

மாந்தர்த மிளமை நில்லா திவையெலா மனத்தி னெண்ணிச்
சாந்திகொள் பெரியோர் நீவிர் சமாதீயோ கத்தைச் சார்மி
னுய்ந்தவென் சிந்தை சீவ நாயகன் வசமா கைக்கே
யெய்ந்தது நிலையு மெய்தா திறைவனைப் பிரிந்தாள் போல. 92

ஆதலால் வருத்தங் குற்ற முபாதியோ டைய மின்றி
மீதுறு மோக மின்றி விளங்கிய நிலைமை யேது
காதல்செய் யின்ப மிக்க விடயமாங் கனலில் வீழ்ந்துந்
தீதுறு நிலைமை யேது தீயினு ளிரதம் போல. 93

வசனமாந் தொழிலே யன்றி வருபவந் தான்வே றில்லை
யசைதரு புனலே யன்றி யளக்கர்வே றிலாத தேபோ
னசையுறு பெரியோ ரெங்ங னவையுறு துயரந் தீர்ந்தா
ரிசையநீ யுணர்ந்த தந்த நிலையினை யெனக்குச் சொல்வாய். 94

இந்நிலை யிலதா வேனு முளதியம் பாரா வேனு
மந்நிலை யைய மின்றி யகங்கர மின்றி யானே
துன்னுற மாட்டேன் செய்வ தேதெனிற் சோறும் வேண்டே
னன்னய நீரும் வேண்டே னலம்பெறு துகிலும் வேண்டேன். 95

முழுகுத ரூன மாதி நியமங்கண் முழுதுஞ் செய்யேன்
விழுமிய கருமஞ் சம்பத் தாபத்தின் மேவே னியாக்கை
நழுவுவ தன்றி யொன்று நயக்கிலன் மவுனி யாகி
யெழுதுமோ வியம்போற் காமங் கோபம்பற் றின்றி நிற்பேன்.

எனவுரைத் தமல சீத மதியென வினியோ னின்சொல்
வினவுநல் விவேகந் தன்னல் விரிந்தலர் மனத்தி ராமன்
மனமகிழ் முனிவர் முன்னர் வாய்மொழி யமைந்து நின்றான்
கனமுகின் முன்னர்க் கேகா ரவந்தவிர் கலாபி போன்றே. 97



## சுகர் கதை.



ஈதவ ருரைத்த பின்ன ரிராமனை யினிது நோக்கிக்
காதிசே யுரைப்பா னீயே களங்கமில் புந்தி யாலே
தீதற வனைத்துங் கண்டாய் தெளிவுறப் பிறிதொன் றில்லைப்
போதமார் சுகனு நீயும் புந்தியா லொப்பி ரன்றே. 98

இகலற வுணர்வுற் றேனு மிளைப்பற நயந்தா னென்று
மகமுனி யுரைப்பக் கேட்ட வள்ளலு முரைப்பா னையா
வகமறு முணர்வுண் டாயு மாறுதன் முன்ன மின்றிச்
சுகமுறப் பின்னுண் டான தெங்ஙனஞ் சுகனுக் கென்றான். 99

என்னலு முனிவன் சொல்வா னெழுபிறப் பறுக்கு ஞானந்
துன்னிய சுகனு நின்போற் றொல்லுல கியல்பை நாடி
மன்னிய விவேக முண்டாய் மாசறு முணர்வு பெற்று
மந்நிலை யைய மாகி யாறுத லற்றா னன்றே. 100

விடலரு மசைவு விட்டு விடயத்தின் மீண்ட நெஞ்சன்
வடவரை யுறையுந் தாதை மருங்குற வெய்தி யிந்த
விடருறு மாயை வந்த தெங்ஙன மிறப்ப தெங்ஙன்
றொடர்பிலா ருடைய தெம்மட் டென்றிது தோன்றிற் றென்றான்.

அன்னவன் கேட்ட வெல்லா மறிவுற வுரைத்த போது
முன்னநா னுணர்ந்த வாறே மொழிந்தனை யெனவச் சொல்லா
னன்னிலை பெறுமை கண்டு நல்லுணர் வெனக்குத் தோன்றா
மன்னவன் சனக னென்பான் வழுவறு முணர்வின் மிக்கோன்.

ஆயவன் றனையே கேட்கென் றருளொடு தாதை யேவப்
போயினன் சனகன் வாழும் பொன்மனை வாயிற் சேர்ந்தான்
றாயவன் வரவு கேட்டுச் சோதிப்பான் கருதி மன்ன
னேயின னில்லை நாளே ழிருந்தனன் விகற்ப மில்லோன். 103

மற்றுநா ளேழும் வேறோ ரிடத்துற வைத்த பின்னர்ப்
பொற்றிர ளழகா ரந்தப் புரத்திடை நாளேழ் வைத்துச்
சிற்றிடை மகளிர் போகஞ் சிறந்தவூ ணளிப்பத் துய்த்தான்
குற்றமுங் குணமு நாடான் குளிர்நிறை மதிய மொத்தான். 104

மன்னவன் சனகன் றந்த போகத்தின் மகிழ்ச்சி யாவு
மன்னவன் முன்னஞ் செய்த வவமதித் துன்ப மியாவு
மின்னவன் மனதைச் சற்று மிழுத்தில விளமென் றென்றல்
பொன்னச லத்தின் மிக்க பொருப்பினை யிழுக்க வற்றோ. 105

ஆங்கவ னிலைமை நோக்கி யடிபணிந் தரசன் போற்றித்
தாங்குல கத்தின் செய்கை தவிர்ந்துபே றனைத்தும் பெற்றோ
யீங்குறு பொருளே தென்ன வெங்ஙன மாயை தோன்றிற்
றோங்கிய தெங்ஙன் போவ துள்ளவா றுரைசெய் யென்றான். 106

மெய்ம்முறை முனிவன் கேட்ப வேந்தனும் வியாசன் சொன்ன
வம்முறை யுரைத்த லோடு மறிஞனும் விவேகத் தான்முன்
னிம்முறை யறிந்தே னீயு மெந்தையு மதுவே சொன்னீர்
மொய்ம்முறை நூல்க ளெல்லா மொழிபொரு ளொன்றேயென்றார்.

தன்னுள்விகற் பித்தெழுந்த விகற்பம் போகிற் றவிர்ந்திடு மா யையிற்பயனோர் சற்று மில்லை, யின்னவகைத் தோருண்மை யியம்ப வேண்டு மியாவர்மயக் கமுமாற்று மிறைவ வென்ன, மன்ன னதற் குரைசெய்வான் முனிவ நீயே மதித்துணர்ந்தும் பிதா வுரைக்க மறுத்துங் கேட்டா, யன்னிலையே நிச்சயமிங் ககண்ட ஞான வாகாய புருடனுள னயலொன் றில்லை. 108

அவ்வறிவு சங்கற்பத் தாற்கட் டுண்ணு மதுவிடில்வீ டுறு மந்த வறிவு தன்னைச், செவ்விதினீ யறிந்தனையாற் போகத் திச்சை செகக்காட்சி யனைத்தினையுந் தீர்தி யானு, யெவ்வமற நிறை மனத்தா லடையற் பால யாவுமடைந் தாய்காட்சிக் கெட்டா

தோன்றிற், கவ்வையற வடைகின்றாய் முத்த னாய்க் கருத்தி
லுறு மயக்கமெனுங் கவலை தீர்வாய். 109

சனகனெனு மன்னவர்கோ னிவ்வா றேதத் தன்னிலையாம் பரம்பொருளிற் றளர்ச்சி யாறி, யனகசுகன் பயநீங்கிச் சோக மாறி யயர்வகன்று செயலடங்கி யையந் தீர்ந்து, கனகவரை யேறி நிரு விகற்ப மான கலங்காத சமாதியிற்சிற் ககனத் துற்றான், றினகரனைச் செறிவருட மீரைஞ் ஞாற்றிற் றிரியொடுநெய்ம் மாண்டவிந்த தீபம் போன்றே. 110

சிந்தனையாங் களங்கமறச் சுத்த னாகித் திரைகடலிற் செறிந் தோன்றாந் திவலை போல,வந்துறுவா தனைபோய்த்தற் பதத்தோன் றானன் மாயாமோ கந்தீர்ந்து வருத்தந் தீர்ந்தா, னந்தநெறி யுனக்குமா மறிவ தெல்லா மறிந்தமனத் திற்குரிய வடைவே தென்னிற், சந்ததமு மகிழ்ச்சிசெறி போக மெல்லாந் தனதென் னுஞ் சுதந்தரத்தைத் தவிர்ந்து நிற்றல். 111

போகமுறு பாவனையாற் பொருளல் லாத பொருளிலெழு பந்தநிலை பொருந்த வன்பாஞ், சோகமுறு பாவனைதான் சாந்த மாயிற் றுயர்பந்த மிகத்தேய்ந்து தொலைந்து போகு, மிராகவனே வாதனையி னேர்மை விடா மிகப்பொருளின் வாதனையி னிறுகல் பந்தஞ், சேகறவென் றவர்க்கேது வின்றிப் போகத் திரள்வெறுப் பா மேலவரே சீவன் முத்தர். 112

இராமன்மனத் துணர்பொருளே பொருள்வே றில்லை யென வுயர்ந்தோர் வாக்கினை லியம்பக் கேட்டு, மாமனத்தி னிளைப்பாறி யைய நீங்கு மகத்தான விவனுக்கு மதித்துச் சொல்வா,னேமமுறு காலமூன் றறிந்தோ னாகி யிரவிகுல குருவாகி யெல்லா நோக்கி, நாமவுரு வினைத்துக்குஞ் சான்றாய் நின்ற நல்வசிட்ட னெனச் சபையி னவின்ற பின்னர். 113

நல்வசிட்டன் முகநோக்கி யுணர்தி யோமுன் னாமிருவர் பகைநீங்க நல்லோ ரெல்லாந், தொல்வினைபோய் முத்திபெறக் கமல வேதா சொன்னதனி ஞானத்தின் றொகுதி யெல்லாங், கல்விமிகு மிராமனுக்குச் செப்பல் வேண்டுங் காதறீர் மாணுக்கன் கருத்திற் சொல்லுஞ், செல்வவுப தேசமே யதுவே ஞானச் செழுநூலின் பொருளுமிது சிறப்பு மீதே. 114

காதல்செறி பொல்லாமா ணுக்க னுக்குக் கற்பித்த வுபதே சங் கருநாய்த் தோலுண்,மேதகுபா லெனவசுத்த மேவு மென்று மிகுகாதி சேய்பலவும் விளம்பக் கேட்டுத், தீதறுநா ரதன்வேத வியாத ளுதித் திரண்முனிவர் நன்றிதெனச் சிறப்புச் செய்தார், காதிபுதல் வனைநோக்கிக் கமலத் தோனேர் கமலமுனி புதல் வனிவை கழற லுற்றுன். 115

கலைமுனியே நீர்மொழிந்த படியே செய்வேன் கற்றுணர்ந்த பெரியோர்சொற் கடப்பா ரியாரே, நிலையில்பவ மயக்கமறப் பதுமவேதா நிடதமலை மேலுரைத்த நிமல ஞான, மலைவின்மனத் திருக்கின்ற துரைப்பே னென்ன வஞ்ஞானத் தொகுதிகெட வகண்ட ஞானத், தொலைவில்பர பதமெவர்க்குந் தோன்று மாறு சுத்தவிந யத்துடனே சொல்வ தானுன். 116



## முமுட்சுப் பிரகரணம்.



இராகவகே ளிப்பவத்தி லென்று மெல்லா மியல்புறுநன் முயற்சியினு லியார்க்கு மெய்து, மாகலைநன் ஹூன்முயற்சி யொன் ரு மொன்று வருநூலி லாமுயற்சி மற்றி வற்றின், சோகமினுல் வழிவீடா நூலிலாமை துன்பமாஞ் சைசவத்திற் ருெடரு மிந் நூன், மோகமினல் லோர்கூட்டங் குணங்க ளாலே முயற்சியுறு பெரியோர்க்கு முத்தி பேறும். 117

முற்பிறப்பின் வாதனையின் வயத்தி னின்றேன் முயற்சியிலே னென்செய்கேன் முனிவ வென்ன, வற்புதனே தன்வருத்த முய ற்சி யாலே யடையலாம் பரமபத மயல்வே றின்று, சொற்பயில் வா தனைத்திரளின் பேதஞ் சொல்லிற் சுபமசுப மெனவிரண் டாஞ் சொன்ன வற்றில், வற்புறுமுற் பவந்தோறுந் தொடர்ந்து வந்த வாதனையே ததுவொன்றே மருவி நிற்கும். 118

சுத்தவா தனைதொடரி லதனுன் மெல்லத் தூயபர பதம் பெறுவை சுத்த மல்லாப், பெத்தவா தனைதொடரிற் றுன்ப மாக் கும் பெரிதுவருந் தியுமிதனைப் போக்க வேண்டும், வைத்தசுப மசுபமெனும் வழியி ரண்டால் வாதனையா நதிபெருகில் வருத்தத் தாலே, மெத்தமுயன் றசுபவா தனையைத் தள்ளி மிக்கசுப வாத னையின் மேவி நிற்பாய். 119

மிகமுயன்று வருந்தாமற் சமமா கின்ற வேண்டுகோளாற் றன்முயல்வால் விநோதந் தன்னாற், பகர்மனமாஞ் சிறுமகவை நிறுத்தல் வேண்டும் பலபிறப்பிற் பரிசயங்க ளகலப் பண்ணி, யகல்சுபவா தனையுதித்தான் முயற்சிபேறு மையுறினுஞ் சுபமுயல்வை யதுதீ தல்ல, திகழ்மனம் போய்த் தற்பதத்தைத் தெளியுமட்டுந் தேசிகனாற் சொல்வழியிற் செல்லு வாயே. 120

தூயதா யிகத்தினிதாய்ப் பெரியோர் மேவுஞ் சுபத்தினன் மனவழுக்குந் துயரு மற்ற, நேயமாம் பதமேவி யதுவுந் தள்ளி நிலைநிற்பாய் மீட்டணுகா நெறிய தாக, மாயைநினை வொழித்து நிறை சாந்தி யின்பம் வழுவாம லுதாரமா மதியா லெய்தி, யாய மொழிப் பொருண்முன்பின் கருது நெஞ்சை யமர்சமஞ்செய் தான்மாவி லனுசந் திப்பாய். 121

அவனுரைப்ப வந்துயிர்க ளுளநா ளெல்லா மாகுவனிங் கொருசெயலு மாசை யில்லை, யிவணிருந்து சுழுத்தியுறு செய்கை யாலே யிடர்மனத்தைக் கடந்துசெயல் யாவுஞ் செய்கேன், கவருறுமென் செயலொன்று மில்லை வீர கலைநிறைவும் பேதைமையுங் கருமத் தாலே, விவரமதா யாராய்ந்து மேன்மை யான மெய்க்குருவைக் கொண்டுணர்வோர் மேதை மிக்கோர். 122

ஓதுகின்ற பொருண்முழுது முன்பின் கூட்டி யுணர்பவர்க் கல் லதுபசுவை யொப்போர்க் கெல்லாந், தீதகன்ற குருவுண்மை செப்பா ரன்றே திகழ்சாந்தி விசாரமொடு செறிசந் தோடஞ், சாதுசங்க மெனவீட்டின் வாயில் காக்குஞ் சதுட்டயரு முறவாகிற் றடைவே றுண்டோ, மேதினிகா வலர்மனையிற் கடைகாப் பாளர் விடுவதுபோல் வீட்டிலவர் விடுவ ரன்றே. 123

அன்னல்வர் தமிலொருவ ரன்பா னுறு மனைவருமொத் தன்பாவ ராத லாலே, பன்னளு மிகமுயன்று யாது நீத்தும் பற்றி யொரு வரையேனும் பழக வேண்டு, மன்னுத பிறப்பறுக்க நல்லோர் நன்னூன் மாத வத்தா லறிவைமுதல் வளர்க்க வேண்டு, மின்னாத மாயையெனு நஞ்சம் போத மென்கின்ற காருடமந் திரத்தான் மீளும். 124

சரமழைக ணெய்தன்மலர் மழையை யொக்குந் தழற்பள்ளி பனிநீரிற் சயன மொக்குஞ், சிரமரிதற் சுகமுறுநித் திரையை யொக்குந் தேகமரி வறுகலவைச் செறிபூ சொக்கும், நிரலதிக

நாராச மருமம் பாய்த னெடுங்கோடைச் சிவிறியினன் னீரை யொக்கும், விரவரிய விடயமெனும் விடவி டேசி விவேகமிகுத் தவர்க்கல்லால் விலக்கொ ணாதே. 125

ஊனமிலா ஞானநூல் விசாரத் தாலே யுயர்வீடு நண்ணு மென வுண்மை யன்றோ, தானறியு மனுபூதி ஞான நன்னூற் சற் குருவிம் மூவகையுந் தம்மி லொத்தே, யானவகை யியற்றில்விடா தான்மாத் தோன்று மற்பவறி வினர்கற்ற வரிய மெய்ந்நூ, லீன முறு மடமைதரு மிதுபோன் மற்ற வெந்தநூல் களுமடமை யியற்று தன்றே. 126

மடமையொடு வாழ்கின்ற வாழ்வி னீசர் மனைதோறுமோட் டிரந்துழல்கை வரிசை யாகு, மடர்தனநட் புறவுபர தேசந் தீர்த்த மாச்சிரம மெய்வருத்த மனைத்தி னாலுந், தொடருதவி யில்லைமன வருத்தத் தாலே தூயபத முறுமுத்தித் துவார பாலர், கடவ குணங் கேட்டியுயர் சாந்தி வந்தாற் கர்தனுந்துன் பமுங்கதிர்முன் கங்குல் போற்போம். 127

நல்லவருந் தீயவரு மன்னை போல நம்புதற்கா யமுதுண்ண நண்ணி னாலு,மல்லன்மலர் மகட்புணர்ந்த போது மொவ்வா மகிழ் ழ்ச்சிதருஞ் சாந்தியுளோர் மரணஞ் செல்வங், கொல்லமரெய் தினுமசையார் புலனைந் தானுங் குற்றமுநன் மையுநுகர்ந்து குளி ரார் வாடார், தொல்லறிஞர் மகம்புரிந்தோர் முனிவர் மொய்ம்பர் தூயவரியா ரினும்விளங்குந் தூய்மை யோரே. 128

ஆரியர்பே ணுவதாகி யயலோர்க் கெல்லா மரிதான சாந்தி யமு தருந்தி மேலோர், சீரியவீட் டினையுற்றார் நீயுமந்தச் செயல் புரிவாய் நன்னூலாற் றெளிந்த சுத்த, நேரியபுந் தியினாலே விசா ரந் தன்னை நிறைத்திடுக வதுநிறைந்தா னிகரில் புந்தி, கூரியதாய் வீடணுரும் விசாரந் தானே கொடும்பவநோய்க் கருமருந்தாங் குறிப்பு ளோர்க்கே. 129

கருகியகங் குலின் மறையாக் கதிர்க்கு மட்காக் காண்பரிய பொருளெல்லாங் காணுங் கண்ணாற், றெருளுறநா னுருலகம் வந்தவாறென் செறிபிறவி யாரதெனுந் திகழ்வி சார, மிருளுறு மா பத்தினுக்கு மருந்தா மப்பா லேற்றமுள சந்தோட மேதென் றோதில், வருபொருளி லின்பமறத் துய்த்து வாரா வனபொரு ளிற் றுன்பமிலா மகிழ்ச்சி தானே. 130

நிகரறுசந் தோடவமு தமையப் பெற்று னெடும்போக நஞ் சாமந் நிறைசந் தோட; மகனுறவா சையில்விழுநெஞ் சறிவை நோக்கி லிழுக்குறுகண் ணுடியிலா நம்போற் றேன்று, மகிழ் குணமெய் தியபுருட மகிமை யோனே மாதவரு நராதிபரும் வணங்கா நிற்பர், சகமெனுமா யையை வெல்லத் தக்கோர்க் கெல்லாந் தப்பாத சகாயமாஞ் சாது சங்கம். 131

அறக்குறைவை நிறைவாக்குஞ் சம்பத் தாக்கு மாபத்தைச் சுபமாக்கு மசுபந் தன்னைச், சிறக்குமுயர்ந் தவர்கூட்ட மென்னுங் கங்கைச் சிதநீ ராடி னர்க்குச் செந்தீ வேள்வி, யிறக்கரிய தவந்தா னந் தீர்த்தம் வேண்டா மிடர்பந்த மறுத்தெவர்க்கு மினியோ ராகிப், பிறப்பெனும்வே லைப்புணையா முணர்வு சான்ற பெரியோ ரை யெவ்வகையும் பேணல் வேண்டும். 132

நிறைபவந்தீ ருபாயநான்கா மிவர்களோடு நிறைநட்பார் பவக் கடலை நீத்தா ரன்னுய், குறையுமன மோகந்தீ ரிச்சொற் கேட் பாய் குணம்விரும்பா திச்சொல்லைக் குறிக்கொண் டோர்க்கு, மறையுணர்வு வலிதின்வருங் காம மாதி மயக்கமறுஞ் சாற்கால வாவி நீர்போற், கறைதவிர்ந்து மனந்தெளியுங் கவசத் தோரைக் கணைகள்போன் மிடிமுதலாங் கவலை தாக்கா. 133

தருபயஞ்செய் மாயைமன மீரா தாகுஞ் சமபாவந் தரங்கந் தீர் சாக ரம்போன், மருவலுறும் விசாரத்தான் மிக்கோர்க் கெல் லாம் வாரிதிபோ லாழமும்பொன் வரைபோன் மொய்ம்புந், திரு மதியின் குளிர்ச்சியும்வந் தெய்து நன்னூற் செய்கையினல் லோர்புந்தி செவ்வை யான, கருமவழி மகிழ்வெய்து மறுவி லாத கற்புடையா டன்மனையிற் களிக்கு மாபோல். 134

அற்புதங்க ளனைத்துமிலா விவனுக் கந்த வருஞ்சீவன் முத்திபத மடைவின் முற்றுஞ், சொற்புலனுக் கதீதனு யுலகர் போலத் தோன்றிடுவோன் புந்தியிலோர் தொழில்பற் றுதோ, னற்பயன்பொல் லாப்பயனுற் சுகஞ்சோர் வில்லோ னண்ணியது புசித்தினிதி னன்றுய் நிற்போன், பொற்புறுநல் லாசார விரோத மான போகங்க டமிற்சிறிதும் பொருந்தி டாதோன். 135

ஒருகணமு மொழியாமற் சுகம தாகி யுடல்கடவா னுய்ச் சான்றே ருசாவி னுலே, பெருகியவிவ் வீட்டுநெறி விசாரஞ் செய் வோன் பிறவிதீர் மெய்ஞ்ஞானம் பெற்றே னுகி, வெருளுமறு பிறப்பினுறு தாயர் யோனி விதனமுறுன் சிறிதாகி மிளிர்போ

கத்தின், மருளுமனப் பாவியராய் வெருள்வோர் தாயர் வயிற்
றின்மலப் புழுவென்றே வழங்கற் பாலோர். 136

தகுமவர்க டம்மிற்றா மெய்தப் பட்ட தருமமொடு பொரு
டேடுஞ் சரிதை யோராய்த், துகடீர் தம் மிடத்திலிளைப் பாறி மா
றாத் துரியமெனுஞ் சாந்திநிலை தோன்று மட்டு, மிகுநூல்க ளுப
சாந்தி யொழுக்கம் போத மிக்கவர்கூட் டரவிவற்றால் விசாரம்
வேண்டு, நிகரிலா விசாரத்தாற் றோன்றி நிற்கு நிமலதுரி யத்தி
னிலை நிகழ்த்தற் பாற்றே. 137

பாவனைதீர் துரியமதி னிளைப்பு நீங்கிப் பவமென்னுங் கடல்
கடந்து பாரஞ்சேர்ந்தோன், சீவனென நின்றாலுஞ் சீவத் தன்மை
தீர்ந்தாலு மில்லறத்திற் செறிவுற் றாலுங், கேவலஞ்சந் நியாசியா
யிருந்த போதுங் கிளர்சுருதி மயக்கத்தாற் கிடைப்பட் டாலு,
மியாவதுஞ்செய் துந்தவிர்ந்தும் பயனொன் றில்லை யிமகிரியு றாக்
கடல்போ லியல்பி னிற்பன். 138

ஊகமுள தேற்சிறுவ ருரையுங்கொள்க வொழிந்ததய னுரை
செயினுந் திரண மொப்ப, வேகவிடு வாய்ஞான மெளிது தோன்ற
வியம்புமுவ மானமெலா மேக தேச, மாகநினை வாயுருவ மற்ற
ஞான மாகார மாமுவமைக் கண்டா தென்னா, மூகரனு பவமில்லா
விகற்பத் தாலே மொழிகுதர்க்க மறிவழிக்கு முயல வேண்டாம்.

தந்திரியி லெழுமிசைபோற் சாந்தி முன்னாஞ் சற்குணத்
தின் ஞானமெழுந் தம்மிற் றாமா, மிந்தவிரண் டுங்குளமு மலரும்
போல வினிதுவளர்ந் திடுமொக்க விரண்டுங் கற்கில், வந்தணுகுந்
தனித்தனியே யிரண்டுங் கற்கில் வருபயனொன் றிலதாமிவ் வாய்
மை கேள்வி, முந்து மறம் பொருளின்பங் கீர்த்தி வாணாண்
முழுதளிக்கு மனத்தெளிவான் முத்தி நல்கும். 140



## உற்பத்திப் பிரகரணம்.



### ஞானவிண்மகன் கதை.

முத்தியை நயந்தோர் செய்கை மொழிந்தனஞ் சகங்க டோன்று
மத்திற மினிது கேட்பா யனுபவப் பேற்றி னாலே
பொத்துமுன் னிலைப்பேர் பெற்ற வுணர்வுநஞ் சீவ னித்தைச்
சித்தொடு புமான கந்தை முன்னிலைச் சீவ னென்ப. 141

சீவனெவ் வறிவி னாலே தெரிவுறு மதுப தார்த்தந்
தாவுறும் விவித மான சங்கற்ப விகற்ப முற்று
மேவிய மயக்கந் தன்னால் விரிந்தநீ ரலையா மாபோற்
பூவல யங்க ளாகிப் பொலிந்தது புகன்ற சீவன். 142

பன்னுகா ரணமொன் றில்லைப் படைக்குமுன் படைக்க வேண்டு
மென்னும்லீ லையினாற் றானே யியைந்தகா ரணம தாகி
முன்னுறு பொதுவாங் காட்சி மொய்ப்பொருட் டிரள்க ளாகித்
தன்னுளே சகமாய்க் காற்றுட் சலனம்போ லறிவுட் டங்கும்.

எல்லையி றிசைகள் காலம் புறம்பெனு மிவற்றிற் கேற்ற
பல்லுரு வாயெங் கெவ்வா றெழுந்ததப் படியங் காகுஞ்
செல்லுமிந் நெறியா லிந்தச் செகமெனும் பிரம கற்பம்
புல்லுகா ரணமி லாத பொருளெனப் புந்தி செய்க. 144

இதனைமுன் னிலையாஞ் சீவ னிமைப்பினிற் படைத்த தாகு
மதன்வடி வாகி நிற்கு மனுமான முதல வெல்லாம்
விதமுறு காட்சி மெய்ம்மை பந்தமஃ தின்மை வீடாந்
திதமறு மிதுபோ மாறு செப்புதுந் தெரியக் கேட்பாய். 145

மண்டிய சுழுத்தி தன்னில் வருகனுப் போவ தென்னக்
கண்டன வுலக மெல்லாங் கற்பனை முடிவிற் போக
வெண்டரு மலைவு தோற்றம் பெயரெலா மின்றி யாழ்ந்து
தண்டலி லிருடே சின்றித் தனித்ததோ ருண்மை நிற்கும். 146

சத்தியம் பிரம மான்மா பரமுதற் சாற்ற வேண்டி
யித்திறப் பெயர்மே லோரா லிடப்பெற்ற விந்த வான்மா
சித்திர மாகத் தானே வேறுபோற் றிகழ்ந்து தீது
மெத்திமேல் வருசீ வப்பெர் மேவிய போல வாகும் 147

சீவனென் கின்ற சொல்லும் பொருளுமாய்ச் செறிந்த வான்மா
பாவனை மனனத் தாலே பருத்தெழு மனம தாகு
மேவரும் பிரமந் தன்னில் வேலையி லலைபோல் வந்து
தாவுறு முள்ளந் தானே நினைந்தவா சங்கற் பிக்கும். 148

உன்னுறு மனத்தி னாலே யுலகமா மிந்திர சாலந்
துன்னுறும் பணிக ளென்னுஞ் சொற்பொருட் பொன்னை யன்றி
யன்னிய மில்லைப் பொன்னாற் பணியென வறைய வேண்டா
பன்னிய வுலகாஞ் சொற்குப் பரமன்றிப் பொருள்வே றில்லை. 149

செல்லுறு கான லாற்றிற் றேன்றிடுந் திரைகள் போல
வில்லையா மனத்தி லுண்டு போலெழு மிந்த ஞால
மல்லல்செய் மோகம் பந்தந் தமமல மவித்தை மாயை
புல்லுசம் சார மென்றே ஞானிகள் புகலப் பட்ட. 150

பந்தத் துருவங் கேட்டுணரிற் பாவீட் டுருவு மேல்வெளியா
மிந்தச் சகநீ நான்முதலா மிவைமெய் யென்றல் பந்தமதா
மந்தக் கருத்து நிற்பளவு மரிதா முத்தி வித்தினிடைத் [வெலாம்.
தொந்தத் தருப்போற் காண்பவன்பாற் றேன்ரு துறையுங் காண்ப

பிரிவாம் பொருளின் மரத்திருந்த பேதப் படியே யுதரத்
திற், செறிவாஞ் சிருட்டி சமத்காரஞ் சிதைவற் றுண்டாய்ச்
செறிவதுபோ, லறிவாஞ் சரீரி யெனும்பொருளி னகன்ற வுத
ரத் தங்குரமாய், நெறியார் சகத்தின் வடிவமெலா நீங்கா வியல்
பாய் நிறைந்திருக்கும். 152

நிற்ப நடப்ப வெனுமனைத்தி னிழலா டாது வெறிதிருக்குந்
தற்ப ணந்தா னெப்படியோ தானே விளங்கு மப்படியே
கற்ப முறுநீ நான்முதலாங் காட்சி விகற்ப மெலாமடங்கி
யற்ப மெனினுங் காட்சியறி லதுவே தனிக்கே வலநிலைமை. 153

அத்தமி யாத சோதி யருக்கனு யளவி லாதாய்
மெத்திய பிணியி லாதாய் மேவரும் பிறப்பி லாதா
யெத்தலங் களினு மென்று மியாவுமா யாவுஞ் செய்து
முத்தியு மாகி யோங்கு முதற்பரம் பொருளொன் றுண்டு. 154

பகர்வரிதாய் முத்தராற் பயில்வ தாகிப் பரமுதலாம் புதிதான
பலபேர் பெற்று, மிகவுணர்சாங் கியர்புருட னென்றுஞ் சுத்த வே
தாந்தம் விளங்கினோர் பிரம மென்றுந், துகளறுவிஞ் ஞானிகள்
விஞ் ஞான மென்றுஞ் சூனியர்சூ னியமென்றுஞ் சொல்லப் பட்
டுந், திகழிரவி தேசுக்குந் தேசாய் நின்று தேசளித்துத் திகழ்வித்
துத் திகழா நிற்கும். 155

சுத்தவறி வாதலா லாகாய பாவனையாற் சூழ்விண் ணுகு,
மத்திறனே யெப்பொருளும் பாவித்த போதுள்ள ததுவா மந்தச்,
சித்திடையே மூவுலகுந் திடர்கான லெனத்தோன்றிச் சிதையும்
பல்கா, வித்தனையுஞ் செய்யவுந்தா னித்தனையுஞ் செய்யாம லிருக்கு
மன்றே. 156

நிருவிகற்ப வான்மாவிற் சகத்தோற்ற மொடுக்கமிவை நேரா யில்லை, மருவிகற்ப பேதமுறுப் பராபரமா மப்பொருளை வயங்கக் கண்டாற், பெருமனக்கட் டறுமைய மறுங்கரும மறுமென்றான் பெரியோன் வள்ள, லொருகடுகிற் பொன்மேரு புகிலன்றே பிர மாண்ட மொடுங்கு மென்றான். 157

இருளன்றி யொளியன்றி யளவன்றி யலைவன்றி யியல் பொன் றின்றிப், பொருகின்ற பூதங்கள் பலபொருள்க ளன்றி நிறை புரண மாகி, யுருவன்றி யருவன்றி யுளதன்றி யுண்டில்லை யன்றி யொன்றாய், வருகின்ற திரிபுடியி னடுத்தோன்று மறவாது மதித் துக் கொள்வாய். 158

அவ்வகையாம் பரவடிவை யறிவுநிறை வுறவிரிவா யருள்வா யென்ற, செவ்வியவள் ளனுக்குமுனி செப்புவான் பெருங்கற்பஞ் சேர்ந்த போதி, லெவ்வகைமு லங்களுக்கு மூலமாம் பிரமமே யிலங்கா நிற்கும், வவ்வுமனத் தொழின்மாற்றித் தனைமாய்த்தாற் பெயரிறந்த வத்து வாகும் 159

முடிவுகன வஞ்ஞான மில்லாநீ டுயிலதுவா மும்மை யாகி, யடர்தருஞா துருஞான ஞேயமெழுந் தொடுங்குமிட மதுவே யாகுந், திடவிசும்பன் றாயிருந்தும் விசும்பான நிலைபதுவாஞ் சித் தம் புந்தி, படர்மனம்போய்த் தாவரம்போற் பெறுமுளறி வொப்பாமப் பரம ரூபம். 160

அயனெடுமால் சங்கரனுஞ் சதாசிவனு மிந்திரனு மருக்கன் றானும், வியனிலுப சாந்தராம் வேலையினி னுபாதியெலாம் விட்டு நீங்கிப்,பயனில்சக மென்கின்ற பற்றகன்று சின்மயமாம் பரம ரூப, முயர்விகற்ப மிலாவடிவா யெங்குநிறை சிவமாகி யொன்றாய் நிற்கும். 161



## லீலை கதை.



பக்கத் தொடுதிங்க ளூறும்பரு வங்க டேர்க்காற்
றெக்கிச் செறிநா ளதிற்கூம்பு தொடர்ந்த வாண்டு
புக்குற்ற தோரச்சி மைப்போத திணுபி யாதி
மிக்குத் திரிகால வன்றேர் விரைந்தோட லோடும். 162

மனவான மும்வானமு மாசறு ஞான வானு
மெனவான மூன்றின் முதல்வான மிரண்டு மின்றிக்
கனஞான வானெய் துதல்கண் டதைவிட்டுப் போத
நனவா யயலொன்றை யுற்றுனடு ஞான வானும் 163

சங்கற்ப சாலந் தவிர்ந்தாலுப சாந்த மாகித்
துங்கப்புவி யாவையு மாகிய சோதி தோன்று
மிங்கற்ப முங்காண் பனவில்லை வெறும்பொய் யென்று
லங்கப் பொழுதவ் வறிவாலது சேர்த லாகும். 164

ஞேய மின்றிய ஞானமே ஞானமு நினைத்துமேற் பெறும்பேறு
மாய வந்நிலைப் பரிசய முத்திபென் றதிற்பரி சயம்பண்ணற்
றாய தோற்றர வென்றந்த விரவிலே சொன்னவ ரிருவோருங்
காய வாதனை யறிவறச் சமாதியைக் கலந்தசை வறநின்றார். 165



## கற்கடிகதை.



காட்சி யென்னுங் குற்றமறக் கதித்த லீலை கதையாலே
யாட்சி யான சுகமென்னு மதிபா ரத்தை யறவிடுவாய்
சூட்சி யான வுலகமெனுந் தோற்ற முடைத்தாய்ப் பேதமற
மாட்சி ஞான சுகவடிவாய் வயங்கும் பிரம மேயுளதே. 166

அதனுக் கிணையாய்ப் புகலரிதா யகன்று நிறைந்தாழ்ந் தமல மதாய்ச், சதம தறிந்தோற் களுமியல்பு சாற்றற் கரிதாய்ச் சாந்த மதாய்த், திதமுற் றசையாக் கடலென்னத் தீப மென்னத் திகழ்கின்ற, முதன்மைப் பிரமத் தொளிதானே முடிவில் பரமா கிய சீவன். 167

தனையுண் டாக்கு நீள்விறகாற் சற்று நெருப்புத் தடிப்பதுபோ லினைய சீவன் கனவறிவா லியானென் றுணர்ந்து சங்கற்ப
நினைவி னாலே யகங்கரிக்கு நிறைந்த சீவன் காரணமாய்
வினையுஞ் சித்த மனம்பகுதி மாயை யெனும்பேர் வகுத்துரைப்ப.

இனத்தாற் படரு மனம்பரம னேது வாயிப் படித்தோன்று
மனத்தால் விரிந்த சகமெல்லா மனன வடிவே மற்றில்லை
கனத்தாற் கரைதீர் பலவறிவாங் கல்லோ லச்சிற் கடல் பொங்குந்
தினத்தா னீண்ட கனவொப்பச் சித்த வசத்தாற் சகந்திரமாம்.

தெரியாத் தறியிற் கள்வனெனத் தெளியா மையினு லுல குண்டா, மரியாப் பிரமத் தொடுசீவன் மறந்தும் பேத மிலா ததுபோற், பிரியாச் சீவ சித்தங்கள் பேத மில்லை யிதுபோலத், தரியாச் சித்தஞ் சகங்களுக்குச் சற்றும் பேத முளதாகா. 170

இதுகா ரணமா மொருகதைபண் டிகலா ரரக்கி யியம்பியது
முதுவாம் வினுவா லறிபொருள்கண் முழுதுந் தெளியத் தெளி
ததுநீ கேட்பா யிமவானுக் கயனுத் தரபா லமர்கிற்பாள் [விப்ப
விதுவா மெயிற்றுக் கற்கடிப்பேர் பேழ்வா யரக்கி மின்கண்ணுள்.

விகற்ப மிறந்த சமாதி நெடும்பகன் மேவினண் மீளவிடா
வுகப்பொடு நெஞ்சொடு கூடின டொல்பசி யுன்னின ளுனெனு
றிகத்துள மட்டு முடற்குள தான வியற்கைவி டாததனுற் [மா
சகத்தி லரக்கர் குலத்தொழி லான தசைப்பலி கொள்வனெனு.

அயனுரை செய்தது மப்படி யாதலி லந்தவு ரைப்படியே
கயவ ருடற்பலி கொள்ளுவ னென்று களித்திம வானயல்போய்
வயமிகு வேடுவர் மண்டல மேவி வனத்தி லுறைந்திடுநா
ணயமுறு மந்திரி தன்னொடு மங்கொரு நரபதி நண்ணினனல். 173

முச்சுடர் வந்துறி னுங்கரு கத்தகு முற்றிருண் மூடிரவூ
டச்சமு றுரவர் சோதனை செய்தலு மங்கவள் கண்டளவே
பச்சிரை யாமிவர் மெய்யறி வில்லவர் பாமர ராகியுளா
ரிச்சக மேலுயர் வாழி விகம்பர மெங்கு மிடும்பையெனு. 174

மீளவு நின்றுணர் வாளயன் முன்னம் விதித்தது மிப்படியே
கோளற வந்த பயன்கவ ராதவர் கொச்சை மனத்தினரே
நீளநி னைந்துணர் புந்தியு நற்குண நீர்மையு மெய்தி யுளார்
மாளவ தஞ்செய நெஞ்செழு மோவிவர் வன்றுயர் மேவுவரோ.

வஞ்சமினீள் புகழ்வாணுள் வகுப்பரிய சுகமமர்ந்தோர் வணங்க லாவா, ரெஞ்சலிலா வாவியினு மினியவரா தலினவருக் கிடரே வந்தா,லஞ்சலென வுயிர்கொடுத்து வளித்திடவேண் டின ராவ ரன்பா னேர்க்குத், தஞ்சமுறக் காலனையு முறவாக்குந் தன்மையினர் தக்க சான்றோர். 176

அரக்கியெனு மியாமுதலா யுயர்ந்தோரை யாதரிக்கு மன்பு கண்டா, லிரக்கமுறப் பொன்போல யாவரே விரும்பாதா ரிகலோ கத்திற், புரக்கவரு நிறைமதிபோற் புணர்ந்தோரைக் குளிர்விப்

பர் புணரா தோரே, பரக்கழியா விறந்தோராம் புணர்ந்தோரே முத்திமுதற் பயன்பெற் றோரே. 177

ஆதலினு லிவர்தம்மை யறிஞரோ வறிவிலரோ யார்கொ லென்னச், சோதனையாம் வினுவுரைகள் சொல்வோமென் றுரு மேறுந் துணுக்கென் றஞ்ச, மீதுறநின் ருர்ப்பரித்து வெவ்விடிக் குப் பின்னுலி வீழ்க்குங் கார்போ, லோதரிய கொடியவன விசும் புக்கு மதியிரவி யொப்பீ ரென்னு. 178

மீட்டுரைப்பாண் மாயையெனும் வெவ்விருட்பா றையின் கீழே மிளிர்ந்து மாயு, மீட்டமுறு புழுப்போல்வீ ரெனக்கிரையா யிக்கணத்தே யிறக்க வந்தீர், சேட்டமுளார் போலிருந்தீர் தீயவர் போன் றீரெவர்நீர் செப்பு மென்னக், கேட்டளவே கொலையரக்கி கேளென்னத் திறல்வேந்தன் கிளத்த லுற்ருன். 179

எவ்வுழிநின் றணைநீயிங் கிசைத்தவெலா மிளவண்டி னிரைச் சல் போலச், செவ்விதுகேட் டன்மென்ன வரக்கியுநன் றென் றெதிரே சிரித்த லோடும், வெவ்வியபல் லொளியாலே வெளியா கக் கண்டிறையும் வெருவ லின்றி, மைவரைபோல் வாய்திறந்து வாளாநீ வருந்தலெனு மன்னன் சொல்வான். 180

எய்தாநின் ருளபயனுக் கியற்ருதா ரில்லையா மென்ற போது, நொய்தான கருமத்தி னெய்தானோர் விரைந்திடுவர் நொய்மை தோன்ற, வைதான புந்தியினு லாறுதலா லறிவுடையோ ரனைத் துஞ் செய்வர், வெய்தாவுன் போல்வாரைக் கொதுக்கெனவீ சிடு மெங்கள் வீரக் காற்று. 181

ஆதலால் விரைவையொழி யுன்கருத்தை யுரையெங்க ளருகு வந்தோர், காதலா லிரந்தபொருள் கனவினுநல் குவமென்று கழற லோடும், போதமுங்கல் வியும்வலியும் பொறையுமள விலரென்றே புந்தி செய்தாண், மேதகமா மவருரையை மிகவியந்தா ளிழிவிலா மெய்ம்மை கணடாள். 182

வாக்குமுகங் கண்களான் மாறுபடா துயர்ந்தோர்தம் மறு வில் சித்த, மேக்குயரு மிவற்ருலே யுண்ணினைவு மறியலா மே லோர் தாமே,பாக்கியம்போல் வந்தெய்திற் சந்தேகந் தெளியாதார் பதக ராகுந், தாக்குமுரை யாலிவரை யறிதுமெனு யாவர்நீ சாற்று மென்ருள். 183

வினையமுற வரக்கியிது விளம்பிடமங் திரிவிளம்பும் வேடர்க் கெல்லா, மினையவன்மன் னவனமைச்ச னைகு மிருட்போதி லெங்கு நாடி, யுனைநிகர்வா னாச்சோதித் தொறுக்கவுயி ரொடுக்க வுயிர் நிறுத்த வந்தோம், நினைவிதுவந் ததற்கென்னு விவன்கூற மீண்டந்த நிருதி கூறும். 184

தீயவனு மந்திரியா னல்வேந்துந் தீவேந்தாந் தீமை யில்லாத்
தூயவனு மந்திரியாற் றீவேந்து நல்வேந்தாந் தொடர்ச்சி போல
வாயநெறி மன்னவரா லமைச்சருமப் படியாகு மாத லாலே
நேயவிவேகத் தமைச்ச னுண்டாகி லெப்பயனு நிருபர்க் குண்டாம். 185

மன்னவனெப் படியுலகின் மன்னுயிரு மப்படியா மகிமை தானு, நன்னடுவு நிலைமையுமெய்ஞ் ஞானநூ றெளிந்தவர்க்கே நண்ணு நிற்கு, மன்னஅகற் றிலரென்னி லரசாமைச் சர்களென் பேர் ரபத்த ராகு, மின்னகலே யிலதாகி லெனக்கிரையா யிளமை நல மிழந்தி ரின்றே. 186

சிங்கமெனு முங்களையான் செப்புகின்ற வினுக்கூட்டிற் சிறை செய் கின்றே, னுங்கண்மதி யாற்றிறந்தா லுயிர்வாழ்வீ ரென வகுத்தென் னுரைசெய் கென்னுத், துங்கரா பதியுரைப்பத் தொல்லரக்கி நல்லமுதத் துளிகள் போல, வங்கவருக் குரைத்த வெலா மிராகவகே ளெனவசிட்ட னருள லுற்றுன். 187

அண்டநிரை பலகோடி பலவாயு மொன்றுமெவ் வணுவி னுள்ளே, விண்டகடற் குமிழிகள்போல் விரிதொடுங்கும் விண்ணு யும் விண்ணன் றேது, தண்டறவுண் டாயிருந்து மிலாததெது சரித்தேயுஞ் சரியா தேது, கண்டிடநில் லாதாயு நிற்பதெது சித்தாயுங் கல்லா மேது. 188

வானிடையோ வியமெழுது கின்றதெது வித்திடையின் மரங்கள் போல,வீனமிலா வெவ்வணுவி லுலகமெலா மிருக்கின்ற தியாதி னின்று, மானகடற் றிரைநுரைபோ லொருபொருளும் பிரிவாகா தமைந்த நீரு, மீனமறு நெகிழ்ச்சியும்போ லேதோன்றி யிருமையுமென் கொருமை யாகும். 189

இந்தவினு வின்பயனே நம்முணர் வாலேதோன்ற வியம்பு வீரேற், கந்தமுற வென்குழன்மே லெப்போது மிருக்கின்ற கமழ் போ தாவீர், மந்தமுறு புந்தியினல் வகுத்துரைக்க மாட்டாது மயங்கு வீரேல், வெந்தவயிற் றெரிகனற்கு விறகாவீ ரென்றாக்கி விளம்ப லோடும். 190

பூதாதி யைந்து பொறிபுலன்க ளெல்லாஞ்சித்
தேதாதி யந்தமவை யெல்லாஞ்சித் - தோதரிய
கற்பனையுஞ் சித்தனைத்துங் காண்பானுங் காட்சியுஞ்சித்
தற்பமும்வே றில்லாமை யால். 2

புத்திவிகற் பத்தாற் பொருந்துசக பேதமெலாஞ்
சத்தியம்போற் றோன்றுவது சாட்சியன்றோ - முத்திமுதற்
சுத்த மசுத்தஞ் சுகாசுகங்க ளுள்ளதில
தத்தனையுஞ் சத்தாத லால். 3

பார்த்ததிசை யெல்லாம் பரிபூ ரணசொரூபந்
தீர்த்தமெல்லா மானந்த சிற்சொரூபங் - கீர்த்திக்குந்
தோத்திரங்க ளெல்லாஞ் சுகசொரூப நம்மையலால்
வேற்றுருவ மேதாகு மே. 4

அய்யா சகத்தோற்ற மாதர மெல்லாநீ
பொய்யாது சோதியெனப் போதித்தான் - மெய்யாக
வுற்றுணரி னுனென் றுரையா ரொருவரில்லை
முற்றுணர்வா நானே முதல். 5

நம்மையறி வேவடிவா நாங்கண்டோ நம்மையன்றிச்
செம்மை யுலகத் திரள்காணோ - நம்மைநா
முற்றுப்பா ராதிருந்தோ மல்லா லொருகாலு
மிற்றுப்போ னோமோ வியாம். 6

எல்லாரு நானு விருந்துரைப்பா ராகிலெனை
யல்லாம லீச னளவுமில்லை - சொல்லாலே
பெற்றமகன் தம்பி பிதாப்பே ருரைத்தொருவற்
குற்றவுடல் வேறாகு மோ. 7

நாமா யிருந்தோமு நாமேநா மல்லவாய்ப்
போமாறு போகும் பொருளுநாம் - யாமத்துத்
தானே யுறங்கிச் சகத்துருவாய்த் தோற்றிவிழித்
தானே யவன்போலத் தான். 8

ஆகமா யாருயிரா யஞ்ஞான மாய்ஞானப்
போகமா யின்பப் பொருளாகி - யேகமாஞ்
சிற்சொரூப மாகியெல்லாச் செய்கையுமா நம்முடைய
தற்சொரூப மேதான தால். 9

ஆனந்த மென்பா ரதீதமென்பார் நான்மறைக்குந்
தானந்த மாஞ்சர்வ சாட்சியென்பார் - ஞான நூல்
சொன்ன குறியெல்லாந் தொடராத வென்வடிவுக்
கென்னகுறி சொல்லுவேன் யான். 10

நானோ வதுவோ வதுநானோ நானதுவோ
ஞானோ தயமோநா தாந்தமோ - மோனமோ
சுத்தமோ சூனியமோ தோற்றுஞ் சுபாவநிலை
யித்தனையு மல்லவா மே. 11

புத்தோக முத்தோகம் பூரணா னந்தோகஞ்
சத்தோகஞ் சித்தோகஞ் சாந்தோகஞ் - சுத்தோக
மாரணங்க டேடரிய வற்புதோ கஞ்சகல
காரணமாஞ் சைதன்யோ கம். 12

சொல்லாச் சுவானுபவா தீதச் சுகாநந்த
மெல்லாமு நாமா யிருந்தோமே - தொல்லைவினை
யற்றோ மெனுஞ்சொலவு மற்றோமே நம்மைநாம்
பெற்றோம் பிழைத்தோம் பிளாய். 13

சந்ததமு நீங்காத் தனியரசு பெற்றோமே
தொந்தச் சுகாசுகமுஞ் சுட்டோமே - சிந்தனையை
வாட்டியதே காதி வனவாசம் விட்டோமே
வீட்டிற் குடிபுகுந்தோ மே. 14

நனவிற் றசேந்திரிய நாட்டியங்கள் பார்ப்போங்
கனவின் மனக்கூத்துங் காண்போ - நினைவில்
சுழுத்தியிலே யில்லாத சூனியக்கூத் தாடி
விழுப்பொருளாய் நாமிருப்போ மே. 15

நானென் றிருந்தவனார் நான்கண்டே னாகிலவ
னானென் றுருத்தரிக்க வொட்டேனே - ஞான
வடிவான நானேநான் மற்றுளநா னெல்லாம்
படிவா னிறந்துபிறப் பான். 16

சாயையென வாழ்குடும்பந் தன்னைச் சுமந்தாலு
மாயையெனு மேக மறைத்தாலுந் - தூயவெளி
தானாய் விளங்கிச் சகசாட்சி யாயிருக்கு
ஞானநித் தன்றானே நாம். 17

ஏதேது வந்தாலு மேதேது செய்தாலு
மேதேதி லின்புற் றிருந்தாலு - மேதேதுந்
தானுகா வண்ணந் தனியே தெரிந்திருக்கு
ஞானுகா ரந்தானே நாம். 18

ஆட்டிவிட்ட பம்பரம்போ லாசைமுத லிக்கரணங்
கூட்டி முடித்தாலுங் கூடோமே - சாட்டியதிற்
சம்பந்த மற்றோமே தற்சொருப மானோமே
யெம்பந்தம் போனவா றே. 19

அஞ்ஞான மெத்தா லழிந்ததோ வாராயும்
விஞ்ஞான மெத்தால் விளைந்ததோ - மெய்ஞ்ஞானச்
செம்மையனு பூதித் தெளிவுபெற்ற தெங்ஙனே
வெம்மையல்லா லேதுகண்டோம் யாம். 20

மெய்யெல்லா நாமாய் விளங்கியபின் ஞமாய
பொய்யெல்லா மெங்கேனும் போயவோ - மெய்பொய்
யிருவகைக்கு நாமே யிடமானேந் தொந்தித்
திருவகைக்கு மெட்டாம லே. 21

தேகிநா மென்றோமே செல்வநம தென்றோமே
போகிநா மென்றோமே பொய்யன்றோ - வாகமுத
ஞமா யிருந்ததுமெய் நாமசங்க மானதுமெய்
தேமாவித் தேபோற் றினம். 22

வாலமதி யூகமதி போன்ஞான வஞ்ஞானக்
காலமுநாங் கண்டு கழித்தோமே - சீலமா
யப்போது நம்மிலே யாரோப மானவெலா
மிப்போது பொய்யான வே. 23

பொய்தானே யின்பப் பொருளாய்ப் பரம்பரையின்
மெய்யாச் சுகம்போல் விளைந்தக்கா - லேயோநா
மெங்கே பிறந்தோ மெதைத்தெய்வ மாத்தொழுதோ
மெங்கே யடைந்தோ மியாம். 24

ஆராகி யோவிருந்தோ மார்க்கோவி ஞக்குழைத்தோம்
பேரா யிரமாகப் பேதித்தோம் - பூரையினி
னம்மாலே தேடரிய நம்மைநாங் கண்டோமே
யம்மா பிழைத்தோ மடா. 25

கள்ள மனத்தைக் கரைத்துருகப் பொற்றேமே
யுள்ளபடி நம்மை யுணர்ந்தோமே - தெள்ளமுதச்
சச்சிதா நந்தமுநாந் தாமா யிருந்தோமே
யச்செல்லா நாமாகை யால். 26

கண்ணலாற் காட்சியுண்டோ காதலாற் கேட்பதுண்டோ
விண்ணலா லேதும் விரிந்ததுண்டோ - வெண்ணுங்காற்
கானலா றேடிவரக் கண்டதுபோற் றேற்றுகினுந்
தானலா துண்டோ சகம். 27

என்னைத் தவிரமற்றிங் கேதுமிலை யென்னுணை
பொன்னைத் தவிரவிலாப் பூடணம்போற் - பொன்னையுரு
வேறுக்கிப் பேருரைத்த வேற்றுமைபோ னம்மையுமவ்
வாறுப் பகுத்துரைத்தோ மால். 28

வாக்கிற்கு மெட்டா மனத்திற்கு மெட்டாது
தேக்கிட்டா லுந்தெவிட்டாத் தெள்ளமிர்த - நாக்கினீ
ரூறல்போ லெம்மிலே யூறியூ மைக்குடம்போல்
வேறறநா மாயிருந்தோ மே. 29

ஏதுசிவா னந்தமோ வேதுசிவா காரமோ
வேது சிவன்செயலோ வென்னுதே - யேதும்
பிறிவாகா வொன்றுகாப் பேதமா காத
வறிவா நிறைவே யது. 30

தானறியுந் தத்துவங்க ளெல்லாந் தனக்கனியந்
தானதுவே யன்றென்று தள்ளுங்கான் - ஞானமாய்த்
தள்ளுமவ னுயிருக்குந் தன்னுற்று னென்றுணர்ந்து
கொள்ளுமது வேசாந்த மாம். 31

சாந்தமே தற்சாட்சி தற்சாட்சி யேபிரமம்
போந்த பிரமமே பூரணமா - மாய்ந்துணர்ந்த
சுத்தபரி பூரணமே தோன்றுச் சுவானுபவஞ்
சித்தநிலை தானே சிவம். 32

சித்தம் பிறந்து செகம்பிறந்து நானெனவோர்
கத்தன் பிறந்தவழி கண்டோமே - சித்த
மடங்காமை யேமாயை யம்மாயை மாய்ப்பார்
திடந்தானே சாயுச்சி யம். 33

எல்லையற்ற சென்ம மெடுத்தோ மிறந்தோமென்
றல்லனுற்ற பீதி யழிந்தோமே - தொல்லுலக
மெல்லாங் கடுவெளியா யென்வடிவா மென்றன்வடி
வல்லாது பொய்யாத லால். 34

காலங் கருதிக் கடவுளரைக் கைகூப்பிச்
சாலவிர தங்களெலாஞ் சாதித்தே - மேலுணர்வா
லீதெல்லா நாமலவென் றெண்ணியனந் தானந்த
போதநா மாகாத போது. 35

நித்தியமா யேகமாய் நின்மலமாய்ப் பூரணமாய்ச்
சத்தியமா யானந்த தற்போத - சுத்தராய்ச்
சித்தநிலை பெற்றவராய்த் தீர்ந்தசன னத்தவரா
யுத்தமரா வுள்ளார்க் குறும். 36

வெட்டெனவும் பேசார் வெகுளார் முகங்கோணா
ரிட்டபதார்த் தம்பெரியோர்க் கேற்றுவைப்பார் - துட்டர்களைச்
சேரா ரியாவர்க்குந் தீங்குரையார் கண்சிவந்து
பாரார் பிறவிதீர்ப் பார். 37

பொன்றும் பொருளைப் பொருளாக வும்போற்றா
ரென்று நலந்தீங் கெடுத்துரையார் - சென்றசில
காரியத்தை நோக்கிக் கழியா ரிழிவுசெயா
ராரியரே தாமாகு வார். 38

வேத விதியை வெறுத்துரையா ருள்ளளவு
மோத லுருக லொழிந்திரார் - சாதன்
மறவார் கருத்திளகி மண்ணுலகில் வாஞ்சை
பிறவார் பிறவாத பேர். 39

சித்த சலனந் திடுக்கெனவுஞ் சற்றுமுறா
முத்திவழி கேட்கவே மோகிப்பார் - புத்திபோய்
மாடுநம வீடுமனை மக்கள்செல்வ மாற்சரியங்
கூடியழுந் தார்பக் குவர். 40

ஆர்க்கு வருவிருந்தென் றுவனவும் போவனவும்
தீர்க்கநிலை யன்றித் தெளிவரோ - பார்க்குங்கால்
சாந்தராய் நித்தியராய்த் தத்துவபோ தத்தவராய்த்
தீர்ந்தநிலை நின்றார் சிலர். 41

சங்கற்ப சாலச் சகத்தோற் றாவையெலா
மிங்கற்ப மென்னு திழிவரே - பங்கமற
விம்மை மறுமை யிரண்டிடத்து மப்பாலுந்
தம்மையன்றிக் காணு தவர். 42

சத்தப் பிராந்திசத சத்தாம் பிராந்தியெலாஞ்
சித்தப் பிராந்தியென்றே தேறுவார் - முத்தர்தா
மாரோப மாகு மவத்தைதொறுந் தோற்றியழி
யாரோபம் பொய்யாத லால். 43

தேகா லயத்திற் சிதாகாச தேவதையை
யாகாய சாந்தி மலராலே - யேகாந்த
மந்திரத்தாற் பூசைசெயு மாதவரை யாதரித்துச்
சந்ததம்வாழ் வார்க்கார் சரி. 44

முக்கனியும் பாற்சோறு முன்பிருக்க நாயருந்திக்
கக்கியசோற் றுக்குக் கருதுவா - ரெக்கலைக்கு
மெல்லாப் பொருட்கு மிரும்பொருள்யா மென்னுமல்
வல்லார்க் கடிமைபுகு வார். 45

செம்மையறியார் செகத்தோற் றரவறியார்
தம்மையறி யார்வினையுந் தாழ்வறியார் -தம்மிலே
யந்தரராய் வீணே யவமதிப்பார் நல்லோரை
யெந்தவழி போவா ரிவர். 46

ஐங்கணையும் பூவா மறுகா லளிகாணு
மென்கரும்பாம் வில்லனங்கன் வீரனும் - வன்காத
லேற்றுவனு மெல்லாம்பொய் யிப்படியே பாழுலகத்
தோற்றமெலா மெய்தானு சொல். 47

காலமோ தேவதையோ கன்மமோ மாமாயைச்
சீலமோ விம்மனத்தின் செய்கையோ - கோலியநல்
லுச்சாக மோநலந்தீங் குத்தரிப்ப தேதகிலே
யெச்சார்பு மில்லா விவர்க்கு. 48

தன்னைத்தான் றேடாச் சதிகார ரேன்பிறந்தா
ரன்னத்தால் வந்தவுட லார்தாமார் - முன்னம்
விடுத்தவுட லெத்தனையோ மீண்டுமீண் டின்பா
லெடுத்தவுட னூறு யிரம். 49

பொய்யாக்கப் பொய்யைப் பொருளைப் பொருளாக்க
மெய்யாக் குருவொருத்தன் வேண்டிற்றே - பையமே கா
பூபாலராகிப் பொலிந்திடுசீ வன்களெலா
மாபாச ரென்பதுவே யாம். 50

ஒன்றிலே தோற்று முலகப் பிரதிபிம்ப
மொன்றுபோற் றேற்றுத வுண்மையென்றே - வென்றும்
பொருளாகப் பாராத புன்மையறி வோர்க்கே
மருளார் பொறிபோல வாம். 51

தன்னை யறியாமற் றானே தனைத்தேட
லென்ன புதுமையிதை யென்சொல்வேன் - மன்னுலகிற்
றண்ணீரி னின்றுகொண்டு தாகந் தணியார்போ
லெண்ணீர்மற் றேதுரைப்போம் யாம். 52

சாத்திரங்கள் கத்தித் தலைவீங்கு வீர்குலமுங்
கோத்திரமுங் கொண்டுவினை கூட்டுவீர் - சாத்திகரா
யும்மாலே யும்மையுணர்ந் தோயாத் தொழில்விட்டுச்
சும்மா விருக்கொணு தோ. 53

ஆசித்துத் தெய்வத் தடையாள முங்கொளுத்திப்
பூசித்துக் கைகூப்பிப் போற்றுவார் - நேசிக்குந்
தானே வதுவோ சதுரான தெய்வமென
வூனே டுழல்வா ருறா. 54

தேரைத் திருநாளைச் சேவிப்பார் தம்மைவிட்டங்
காரைத் தொழப்போரு ரையகோ - தேரிடையே
பார்க்கின்ற தெய்வம் பரிபூ ரணமலவோ
யார்க்குந் தெரியாத தோ. 55

மூலக்கு ளேயிருந்து மூச்சடக்கிப் பேச்சடக்கிச்
சாலக் கனயோகஞ் சாதிப்பார் - மேலுணர்வு
கண்டிருக்கச் சாதனையேன் காயத்தை யேவலித்திங்
குண்டிருக்க வெண்ணுகிறு ரோ. 56

கட்டப் படாமற் கரபாத் திரந்தரிப்பார்
மட்டித் தொருகோ வணராவார் - சிட்டர்போற்
றாங்காமற் றாங்குஞ் சுகமும் பெறுவாரே
யாங்கார நீங்குவரா னுல். 57

எச்சாத் திரம்வேண்டு மெச்சா தனைவேண்டும்
பிச்சாட்டல் லோகெடுவாய் பேதையர்க்குப் - புச்சாண்டி
காட்டுவார் போலவந்த கற்பனையை மெய்யெனப்பா
ராட்டுவார் தம்மைக்கா ணூர். 58

ஆண்பெண் ணலியென் றனேக விதமாகக்
காண்பனவு மொன்ருகக் காண்பனவு - மாண்புடைய
சித்தினிடத் தோற்றமல்லா துண்டோ விவைதெளியா
ரெத்தனைசா தித்தாலு மென். 59

எவ்வா றெவரிருந்தெ னெவ்வா றெவர்போமென்
னெவ்வாக்கூட் டிற்றனிமை யொத்ததே - யெவ்விதமு
நீங்குவார் நீங்கா நிலையிலனு பூதிகண்டு
தூங்குவார்க் கன்றோ சுகம். 60

விண்ணுருவ மீசனென்பார் வேற்றுருவஞ் சீவனென்பார்
கண்ணு மிரவியும்போற் காணென்பார் - திண்ணமதா
யத்துவித மாகா தவையிரண்டு மாகாத
சித்துருவந் தானே சிவம். 61

சுத்த சடமான சுக்கிலங்கெர்ப் பீகரித்துச்
சித்தத் துவங்கலந்து சீவித்துச் - சத்தியம்போல்
வந்தபொழு தீதெல்லா மாயையென்றே தற்சொருபஞ்
சிந்தைசெய்வா ரன்றோ சிவம். 62

நேற்றின்று நாளையென நிச்சயித் திராப்பகலை
மாற்றுசுயஞ் சோதி வடிவாகி - யேற்றபடி
யென்றுமொரு நாளா யிருக்குந் திருநாளைச்
சென்றுதொழு வாரே சிவம். 63

ஞானநூல் கற்ருலு நற்றுறவு பூண்டாலு
மோன சமாதி முயன்ருலுந் - தானுகி
யெல்லாக் கவலையுமற் றின்புற் றிருப்பதுவே
சொல்லாரு முத்திச் சுகம். 64

மாகேள்வி பெற்ருலு மாயோக முற்ருலுந்
தேகேந் திரியந் திரிந்தாலு - மாகருணை
சேரா ருபசாந்தி தேருர் பெருர்பேறு
சோராத முத்திச் சுகம். 65

இச்சை யநிச்சை பரவிச்சை யோடுழலுங்
கொச்சைப் பிராரத்வக் கூழர்காள் - பிச்சைமுத
லேற்று ரிடுவா ரிவரென் றுணர்ந்தீரேற்
காற்றுடிக் காலாக லாம். 66

என்னைநான் கண்டபடி யிப்புவியி லெல்லோருந்
தன்னையே காணத் தகுங்காணுஞ் - சொன்னே
ஞெளிநாட்ட மோடுமன முண்ணாட்டம் பெற்று
வெளிநாட்ட மாகா விடின். 67

கன்மந் தவறுமற் காலந் தவறுமற்
சென்மந் தவறுமற் செய்வரேற் - கன்மவிதி
செய்வான் செயலிரண்டுஞ் சித்தத்தே கண்டுதெளிந்
துய்வார் பொருளாகு வார். 68

உள்ளபடி கண்டுகளித் துற்றுருக மாட்டாத
கள்ளரையுங் கண்டு களித்தோமே - கொள்ளையா
விந்திர சாலக்கமல மெத்தனைபுட் பித்தாலுஞ்
சந்திரனுக் குண்டோ சலம். 69

தீங்கடர்ந்து மேன்மேற் செனித்தகரு வேலடியின்
மாங்கனிவந் துற்றதொப்ப வாய்த்ததே - யாங்காங்கு
மெல்லாருந் தேடுபொருள் யாமாக வேயருள
வல்லான் றிருத்தாண் மலர். 70

நானு யிருந்ததெங்கே நானபிமா னித்ததெங்கே
வானுள மண்ணுள வாஞ்சையெங்கே - ஞானகுரு
தேசிகனு ரெங்கே சிவசிவா முத்தியெங்கே
பேசிடவா யெங்கே பிளாய். 71

என்னையே யல்லாமல் யான்பெற்ற தேதுமிலை
யென்னையான் பெற்றிருந்த தெப்போது - மென்னையன்றிப்
பந்தமிலை வீடுமிலை பார்க்கிலிவை யாராயுஞ்
சிந்தனையு மில்லாத தே. 72

செப்படிபோற் காட்டியரு டேசிகனை யோவனைத்து
மிப்படிசோ தித்துணர்ந்த வென்னையோ - மைப்படியுஞ்
சென்மமுடி வாகவந்த தேகா லயத்தினையோ
வென்மயமாய்ப் போற்றுவேன் யான். 73

அன்னமய கோசமா மாகமே யுள்ளளவுஞ்
சொன்னபடி கேட்கிற் சுகமடைவா - யென்னுளுங்
கெட்டபாழ் வாசனையைக் கிட்டாதே யாதேனு
மிட்டபடி கண்டே யிரு. 74

பொறிகா ளுனைநெடுநாட் போற்றிவளர்த் தீரே
யறிவாநந் தப்பொருளு ளுமேனன் - பிறிவாகு
முங்களையு நானு வுணர்ந்துகொண்டே னீங்களினி
யிங்கழியா தொன்று யிரீர். 75

ஆசையே யுன்னு லலைந்துவிட்டே னென்று னு
நீசெய்யுப காரத்தி னின்றேனே - தேசிகனை
யுன்னு லடைந்தே னுனைக்கூடி முத்தியினு
மென்னுணை நானு யினேன். 76

கோபமே யுன்னுற் குறைதீர்ந்தே னீயெழும்பித்
தாபமே செய்யுஞ் சலிப்பாலே - யாபத்து
நீங்கியுப சாந்தியிலே நின்றேன் கனவினுநீ
யேங்கியெழும் பாதே யிரு. 77

லோபமே யுன்னை யுறவுகொண்டே னுன்னுருவம்
பாவமே யென்பருண்மை பற்றுதார் - நீபெருக
வார்ச்சிக்க வேபடுவா யாபாவி யுன்னுலே
யார்ச்சிக்கப் பட்டே னமைவு. 78

நெஞ்சகமே நானேநீ நீயேநா னென்றிருந்தும்
வஞ்சகமா யுன்னை மறந்தேனே - தஞ்ச
முனக்குநா னென்பதுவு முண்மையே யுண்மை
யெனக்குநீ வேறு யிராய். 79

ஓடித் திரிந்தா யுழைத்தாய் பிழைக்கும்வழி
தேடிப் பலகலையுஞ் சிந்தித்தாய் - நாடியொரு
சற்குருவைத் தந்தாயென் சிந்தாய் தயவுசெய்த
நிற்குதவி யென்செய்தே னே. 80

உன்னுருவாய் நானிருந்த வுண்மைபோ லென்மனமே
யென்னுருவாய் நீவந் திசைந்தாயே - செய்நன்றி
பாராட்டு வாருனைப்போ லுண்டோ பரமபதச்
சீராட்டின் மாறு திரு. 81

ஆசைவர்க்க மெல்லா மகற்றிப் பொறைமுதலாந்
தாசவர்க்கஞ் செய்பநலந் தந்தாயே - நேசத்தா
லாதிகா லந்தொடுத்தே னன்புவிடா நெஞ்சேநன்
னீதியா லென்போல நில். 82

என்னெஞ்ச மூருலவ யானுமது போலிருந்தே
யின்னஞ் சமமாகா விட்டேனே - யென்னெஞ்ச
மென்போ லசையா திருக்கவது போல்யானும்
பொன்போ லிருந்தேன் பொலிந்து. 83

ஏதுவா வேண்டு மதுவருக வென்னைவிடுத்
தேதகல வேண்டு மஃதகல்க - கோதென்று
பிச்சையுந் தள்ளேன் பிரம்பத மும்வேண்டே
னெச்செயலு நானுகி னேன். 84

எங்கேநான் போற்றுவது மென்னையே தேவதையென்
றெங்கே தொழுவதுநா னென்னையே - யெங்கே
யிருந்துகிடந் தோடுவது மென்னிடத்தே நானே
யருந்துவதுங் கொள்வானு மாம். 85

தன்னிடத்தி லேதோற்றித் தன்னிடத்தி லேயிருந்து
தன்னிடத்தே கூடுஞ் சகத்தெல்லாந் - தன்னைவிட
வேறன் றெனக்காண்ப ரல்லாலிவ் வீடுபெற்றோர்
மாறென்று காண்பரோ மற்று. 86

ஏதுக்கா சைப்படுவா ரேதுக் ககங்கரிப்பா
ரேதுக்கு மாற்சரிய மெய்துவா - ரேதுக்குந்
தாமே சராசரமாய்த் தானுவா யேழ்புவிக்கு
மாமேரு வொத்துவாழ் வார். 87

மாதிக்கு மாறி மதிகருகித் தீக்குளிர்ந்திவ்
வாதித்தன் றெற்குவடக் கானுலுஞ் - சோதித்து
முன்னிலைமை யாராய்ந்த முத்தரே யெஞ்ஞான்றுந்
தன்னிலைமை குன்றா தவர். 88

பிச்சை முதலாப் பிரமபத மீருக
விச்சை வரினு மிசைந்தாலுஞ் - சொச்ச
நலங்காதார் தாமதுவாய் நாடாதார் சித்தங்
கலங்காதா ரேஞானி காண். 89

வந்தித் துரைப்பார் வழிபடினும் வண்கணூர்
நிந்தித் துரைத்தாலு நெஞ்சுரூர் - சிந்தையற்று
மேகா டவிவரினும் வெய்யோ னுதித்தாலு
மாகாயம் போல்வா ரவர். 90

எந்தெந்தப் போக மெதிராகு மவ்வளவுக்
கந்தந்தப் போக மனுசரிப்பார் - பந்தமற்று
நீதித் தனிநிலையே நிற்பர்கிர ணம்பரவு
மாதித்தன் போலே யவர். 91

சித்துருவ மாகிச் செகசாட்சி தாமான
முத்தரைக்கா மாதி முனியாவே - சித்தத்தி
லிங்கற்ப வாசனைக ளெல்லா மெடுத்தருந்திச்
சங்கற்ப மில்லாத தால். 92

எங்கும் பொதுவா யிருக்குமொரு சீவன்முத்தர்
தங்குமிடந் தானே தலவாசம் - மங்கவர்கள்
பார்வையே தீர்த்தமவர் பாதார விந்தமலர்ச்
சேவையே சாயுச்சி யம். 93

மெத்தென்ற சொல்லும் விருப்பமற்ற நோக்குமெலாஞ்
சத்தென்ற நெஞ்சுந் தளர்நடையுஞ் - சித்தத்
தடங்கா மகிழ்வு மனவரதம் பெற்ற
திடந்தானே ஞானி செயல். 91

எல்லா விடத்து மெமைக்கண்டோ மெம்மிடத்தி
லெல்லாமுங் கண்டோமென் றேகமாக் - கல்லாமை
கற்ற வனுபூதி கைகண்டார் மற்றேது
மற்றூர்சீ வன்முத்த ராம். 95

தானேக னாகியுப சாந்தனாய் நின்மலனாய்
வானே முதற்றன் வடிவாகு - ஞானி
விடுத்ததொழி லெல்லாம் விலக்காகு மன்றே
னடுத்ததொழி லாசார மாம். 96

ஞானனு சந்தான ஞானிக்கு நீராட
லானுகந்த கோலஞ் சதாசார - மானமற
வாங்கிப் புசிப்பதுவே மாபூசை சஞ்சாரந்
தீங்கற்ற சுத்தசமா தி. 97

அண்டமெலாந் தானு யறிவு வடிவாகக்
கண்டபரா னந்தசிவா காரருக்குத்- தண்டித்துத்
தள்ளும் பொருளேது தள்ளா விதிவழியே
கொள்ளும் பொருளெதுவா கும். 98

பெற்றபே ரின்பப் பெரியோர் சரித்திரத்தைக்
குற்றமென நாடுங் கொடியோர்கள் - பற்றருக்
கோசகா ரப்புழுப்போற் கோடான கோடிசென்ம
மாசார்வ ரென்றே மதி. 99

நித்த நிராகார நின்மலா நந்தமய
சுத்த பரிபூ ரணசொரூப - வத்துவித
மெல்லாமுந் தாமா யிருப்பார் கருணைபெற
வல்லா ரவராகு வார். 100

உள்ளமற்று ருள்ளத் துறுபொருளற் றுருள்ளக்
கள்ளமற்றார் ஞானக் கரையற்றார் - தெள்ளமுதச்
சிற்பரமு மற்றார் சிவானுபவந் தானுமற்றார்
கற்பனையு மற்றார்கள் காண். 101

பருவசா ரத்தாற் பலிக்குமனு பூதிச்
சொருபசா ரத்தின் சுவையை - யிருசெவியா
லுண்டிருக்க வல்லா ருலகமெலாந் தாமாகக்
கண்டிருக்க வல்லார்கள் காண். 102



## அத்துவிதரச மஞ்சரி.

சீராரு மத்துவித மேயுண்மை யென்றுமிகத் தெருட்டு தற்குப்
பாராருங் கயவுருவ நரவுருவம் புணர்வடிவம் பரிந்து சாத்தி [பா
யேராரும் வரமொருங்கு நல்கும்விக்கி னேசனென திதயத் தின்
னேராரு மத்துவிதந் தனையறியும் விசேடமெலா நிகழ்த்துவானே.

எத்திசையும் பத்திபாய்ந் திலங்குறுமுள் வாயில்புண ரெழி
ற்கண் ணுடிப், பித்திமனை தனைமருவு பாலனுக்கு வெளிவருதல்
பெருவன் பாம்போற், குத்திரக்கற் பனைமயமாய் மிகப்பொலிபல்
வகையுருவங் கொண்டு வேறு, மத்திரவஞ் ஞானமதை மருவுபுரு
டனுக்குமுத்தி யடைதல் வன்ப. 2

சோரர்களாற் கொடியவா ரணியவழி யினையண்மித் துயர்கூர் பூமா
னீரகஞ்சேர் தன்னூரை நன்குதெரிந் தோன்மொழியா னேருமா
சிரடார்நற் சாந்திமுதற் சாதனங்க ணிறைந்துமிகச் சிறந்த பூமா[று
னோறிசற் குருநாதன் மொழியாற்றற் பதநிலையை நேருவானே. 3

நிருபனுடைக் குமரனுக்குத் தனதான தத்துவத்தை நிகழ்த்
தலாலே, வருகயவ நீர்மைகழ லக்கமுன்று நிருபனியல் வாய்க்கு
மாபோற், சொருபசுக வொருபொருணீ யெனச்சொல்குரு வுபநிட
தச் சொற்களாலே, மருவுகருத் துருத்துவமாய்ந் தொருசுகமெய்ப்
பொருணேரே வாய்க்கு மன்றே. 4

திரமலடி மைந்தனுக்குத் தேகமுத லாங்குணங்கள் செறித
ரூனும், புரையபுமக் குணங்களெலாம் பொன்றுதலும் வெட்ட
வெறும் பொய்யா மென்னப், பிரமமயக் கூடத்த நித்தசுக போத
தனுப் பிரத்தியக்குக், குரமருவு பந்தமுத்தி யென்பதும்புன் மயக்
கத்தா லொளிரா நிற்கும். 5

தெரிகின்ற துறைதிமிரம் பேயாக வச்சமிகச் செறிந்தோனு
க்கே, யெரிகின்ற விளக்கொளியாற் கண்ணுற்று லாங்கதுதா னியங்
குங் கொல்லோ, திரிகின்ற வவிசார திட்டியினு லுண்டெனச்
சொல் செகங்களெல்லாம், புரிகின்ற வுண்மைவிசா ரத்தினர்க்குக்
கிஞ்சினுமே பூணு தன்றே. 6

போற்றுமொரு சிற்சோதி தானேயிவ் வுலகுருவாய்ப் பொலி
யா நிற்குந், தேற்றமுற வாராயின் வேறுபொரு ளொன்றேனுஞ்
செறிவ தில்லைத், தோற்றுமயற் கதிகரண மாம்பழுதை யல்லாது
துன்று சர்ப்பஞ், சாற்றுறுவே றொருபொருடா னுகுதற்கெவ்
வாற்றானுந் தக்க தாமே. 7

திறப்படவீ தெனத்தோன்று ஞாலமெலாம் பிராந்திமாத்
திரமே யென்று, முறப்பொலிந்தன் னியமின்றிச் சுகமயமா மான்
மாவே யுண்மை யாகுஞ், சிறப்புறநின் றொளிருதலான் ஞாலமது
முண்மையெனத் தெரிகே னென்று, லறப்புதுமை சுத்தியிர சிதத்
தாற்றன் னியனெவன்று ணுகா னேகோ. 8

சொல்லுவினை வுறுபோது மற்றதெழு முன்னுமது தொலைந்த
போது, மில்லதுதா னென்றுனு மிவ்வுலக மிலங்குகின்ற திறும்பூ
தாமே, பல்லததி சயமென்னை போலுமகேந் திரசால மான திங்குப்,

குப், புல்லுறுமா யாவியினுற் கற்பிதமென் ருலுமிகப் பொலியு மன்றே. 9

இந்துதினந் துவிதமகன் றிரிந்திடினும் புருடனுக்கிங் கிசைதற் கண்ணில், வந்துறையுந் திமையினுற் பலவடிவந் தானுகி வயங்க லேய்ப்ப, நத்தலில்சன் மயப்பூமா வெனுஞ்சொருப மொன்றேனு நானா வாகிச், சந்ததந்தற் கற்பிதமாந் தமப்படலக் கூட்டுறவாற் றயங்கு மன்றே. 10

மட்டற்ற வெறும்பிராந்தியால்விரிந்து திரநாளு மருவா தான, கட்டப்புன் புவனவட்டங் கொள்ளிவட்டந் தனையுறழக் காணல் வேண்டும், முட்டற்ற தெய்வகதி யாற்பிராந்தி நட்டமெழன் முந்து மானுற், றுட்டத்தின் புவனமது முன்னுட்போல் பின்னுளுந் தோன்று தன்றே. 11

நிலைமையிலா விவ்வுலகங் கந்தர்ப்ப நகரம்போ னிகரற் றோங்குங், தலைமைசெறி ஞானமெனும் பெயர்பூண்ட வம்பரத்திற் சாலத் தோன்று, முலைவகல வெமக்கான்ம வுணர்வுதிக்கின் வெயிலெறித்தா லொழியு மின்போன், மலைவுசெயு மந்தவிந்த வுலகமெலா மக்கணத்தின் மறைந்து போமே. 12

ஆரோப மானசகத் தடங்கவடை வினிலொடுக்கு மருந்தி றத்தாற்
சிராரு நமதுசித்தஞ் சிவமபமே யாகிநனி சேட மாகும்
போராரு மத்தகயம் பரர்ச்செற்றுப் படுகுழியிற் புணரா தென்று
னோராது மில்லாமற் கேவலந்தா னென்றேயாய் நிகழு மன்றே. 13

இம்பருட வின்றுழிக வலதுறைக சபியருக்க னிருக்கு மட்டும், விம்பமயச் சித்துருவாய் விளங்குமெனக் கதனுலே விசேடமென்னே, கும்பமிப்போ துடைக வன்றிச் சிரகால நிலைபெறுக கும்பம் பம்பு, மம்பரத்தி னுக்கணுமாத் திரமேனும் விசேடமென்ப தணுகு றுதே. 14

தங்குறுசிந் தனையினழுத் தத்தினுற் றேற்றுகின்ற தையற் கண்டிவ், வங்கனைமற் றவளென்றே நீனுள்வெய் துயிர்த்திரங்கு மவனைப் போலுஞ், சங்கற்ப மாத்திரத்தாற் பலவிகற்ப மாய்த்தோற்றுஞ் சகங்க ளெல்லா, மிங்குச்சத் தியமென்றே மந்தமதி யினன்வாளா வேற மாலும். 15

தன்னியல்பிற் றற்சுவையாய்ச் சச்சிதா னந்தமதாய்த் தயங்குமென்பாற், றுன்னியமா மோகத்தா லுண்டெனச்சொற் றிடுமிங்

தத் தொன்மை ஞால, மன்னியவோ ரிடத்தினுங்கா ணப்படா தருவுருவே வடிவ மாகு, மன்னியவிண் ணேவியமே போனுமென வையமற மதித்து மியாமே. 16

வானிறம்போற் றிகழத்தி யாசபே தத்தினுன் மறைபட் டாது ஞானகன மானபொருள் கண்டவொரு தற்சுவையை நனிநீங்காதா லூனமுறு பற்பலச ராசரவி சித்திரத்தோ டொன்றி னுனுங் [தே. தானமரும் படவியல்பைச் சித்திரவத் திரமென்றுந் தணந்தி டா

சத்தியசிற் சுககனமா யகண்டிதமாய்த் தெளிபொருளாய்த் தானு மான்ம,தத்துவவத் துவையொருவ னுனென்றே மிகத்தெளி வன்றிறடையொன் றின்றிப், பொத்துடலிந் தியமுதலி யவற்றைம யல் வாதனைகள் பூண்டு நிற்கு, மத்தமதி யினனென்ன தியானென் றே சங்கையற மதித்தன் மானும். 18

செங்கதிரோன் வெங்கதிரா லெதிர்நிகழும் பேய்த்தேரைத் தீரத் தீர்ந்து, கங்கையினற் குளிர்புனலைப் புனிதமுறு மதிமான் கள் கைக்கொண் டாங்கு, மங்குலகை வெறும்பொய்பசை யில தெனத்து ரத்தகற்றி மாதீ ரத்தார், பொங்கினிய வொருசுவையை முனிவர்க ளநுபவிப்பர் பொலியுள் ளத்தே. 19

ஒன்ருகு மண்ணியதா மிகவெளிதா மிணைத்தாகு மொப்பி லாத, நன்ருன வம்பரத்தி னனிதோன்று ஞாலமெலா நகுவித் தெங்குந், தன்றேசாற் பாவுமெழி லாத்துமதத் துவவிரவி தன்னை யையோ,வன்றீய மூடவுல குலூகதிரை யாதரித்து மதியா வன்றே.

மன்னியவா னந்தவொளி வடிவமதாய் நிகழினுமிம் மாஞா லத்தை, யன்னியமா மெனப்பாவித் தறிவில்லான் பெருந்தாப மடைவன் சிசி, மின்னியதீ பாதிகளிற் றிருசியமாய் மிளிர்தருந் தன்மேனிச் சாயை, தன்னினைவே றென்றெண்ணி மாமோகத் தினின் மூழ்குந் தனிச்சே யொத்தே. 21

மடமான மாயைதன துருவமிலா வான்முதலாம் வகைக ளா லே, தடமான வசங்கவொரு சின்மயனைப் பேதிக்கத் தக்க தன் ருந், திடமான மழைத்தாரை தன்னுடைய றுளிகளின்மென் றிரள் க ளாலே, யிடமான பசும்பதும பத்திரத்தை நனைப்பவுரித் தென் கொ லாமே. 22

தோற்றரவு மாத்திரமிங் குருவான சகவிகர்பத் தொகுதி யெல்லா, மூற்றமுறு சங்கமெலா மொருவியசின் மயமென்னை

யொட்டா தன்றே, மாற்றருமா ரோபிதமா மலினதி விசித்திரதன் மங்க ளெல்லாந், தேற்றமிகு நிருமலமாய் வெளியுருவாம் வியோம த்தைத் தீண்டுங் கொல்லோ. 23

பரிபூரண மாகிநிறைந் திருக்குமொரு கரியான பரமா மென்பால், விரிவுறுசாக் கிரத்தினொடு சொப்பனமே சுழுத்தியென விளம்பப் பட்ட, திரிவிதமா மவத்தைகளு நாடோறும் பிறப்பிறப் புச் செறிந்த வாகி, வரியமரு முரகபதி வபுவினிற்கஞ் சுகங்கள் போல் வயங்கு மன்றே. 24

சொப்பனமே சாக்கிரமே யெனப்புகலும் விசேடமிது சொலால்வந் தன்று, துப்புறுமா யாமயமா குதலந்த விரண்டினுக்குந் துலிய மேயா, மப்படியே பிரத்தியக்குப் பராக்கென்னும் விகற்ப முநா மத்தா லான, தெப்பொழுது மெய்ஞ்ஞான சுகமேயிவ் விரண்டினுக்கு மியல்ப தாமே. 25

புறப்பொருளின் வருவிசன சம்பந்தத் தாலிளைப்புப் பொருந்து ருதாய்ப், பறப்பறவிந் தியவழிச்செல் லாதடங்கிச் சகவிகற்பப் பற்றொன் றின்றிச், சிறப்பமர்தன் னனந்த மாத்திரமாய்த் தனித்திருக்குஞ் சித்தம் பெற்றோ, ருறப்படுசாக் கிரத்தினுநற் சுழுத்தியநு பவத்தினிலைத் துவகை கூர்வார். 26

காயமுயல் வுறுதருமக் கட்டுற்றோ ரென்னைமிகக் கருத்த னென்றே, யேயநினைக் கின்றனரே லதனலென் னிருந்தபடி யிருக்கின் றேனற், றேயவரு மேகமதிற் புக்கானென் றறமூடர் துணியப் பட்ட, தூயகுளிர் மதியமவ்வா றம்புதத்தி னணித்தேனுந் தோயுங் கொல்லோ. 27

மித்தையதாய்த் தோன்றுறுமேற் றேன்றுறுக விவ்வுலக விசித்தி ரந்தா, னத்துணையாற் றத்துவவித் தாகிநிக ழெனக்கு வரு மானி யேதோ, சுத்தமயக் காங்கனவிற் பயந்தருகைப் பகடாதி திகழு மேனு, மொத்தவிது சொப்பனமே யென்றறனுசந் திப்பவனுக் குறுமோ பீதி. 28

அனைத்துலகு மசத்தென்றே நெடுங்கால நன்றாக வாய்ந்தோர்ந் தோனுந், தினைத்தெனினும் பிரியாதத் தியாத்துமதிட் டியைச்சத்தஞ் செறிந்தே நிற்பா, னுனத்தகுமிங் கானனந்தா னெக்கானு மில்லையென வொருப்பட் டோனு, மனித்திகழ்தன் முகங்காண விரைந்தத்தங் கைக்கொள்ளன் மானு மன்றே. 29

பொருத்தமுறு மாதாவாற் கவளங்க வளந்தோறும் புலனுற் றுலும், பெருத்ததுயி லாற்சிசுதான் வேறென்றுந் தெரியாத பெற்றி போலப், பருத்தவிழி யதனுலிவ் வுலகெனுமிந் திரசாலம் பார்த்திட் டானுந், திருத்தமுறு மகத்தோரொள் ளொளியாலே யாதொன்றுந் தெரிகி லேனே. 30

திருசியந்தான் புடமாகத் திகழுமெனிற் பூமவுருத் திகழா தாகு மிருமையறு பூமவுரு விலங்குமெனிற் றிருசியமற் றிலங்கா தாமே மருவலுறு மறுதீவு தெரியுமெனி னிப்பூமி மறைந்து போகுந் தெரிவுறுமே லிப்பூமி மறைந்துபோ மவ்வாறத் தீவு தானே. 31

சந்திரன்றன் கலையென்ப தனுதினமும் பெருகுதலைச் சார்ந்த தாகின், பைந்துறுபே ரிருளான தடைவாக நாசமுறு மரபு போல ச், சுந்தரநற் பிரபோதம் பயப்பய்ய மிகவளர்ந்து துன்னு மென் றால், வெந்துயர்செய் விப்பிரமை துகடீர விருதயத்தில் வீய்ந்து போமே. 32

பிரமவநு பூதிதரு மொருசுவையா னிறைவுபெறு பெரியோர் தம்பாற், கருமவநு பந்தத்தால் வருவிதிக ளெல்லாமுங் கழன்று போமே, வரமருள்சித் தர்கடெரிவித் திடுமிரசா யனமருந்தி மகிழ் வார்ந் தோர்பாற், றமுறுபா கத்தால்வந் துறுமருந்தின் விதிக ளெலாந் தங்குங் கொல்லோ. 33

சகலவடி வமுந்தானுய்த் திகழுமுனி வரனுமொரு சமாதி தன்னை யகிலமதி னுட்கழிப்பான் முன்போலன் புற்றுமிக வாத ரிப்பா னிகிலவளப் பமுநிறைந்த பூபால னெருவன்று னோம் போக்க வகைவகையாஞ் சதுரங்கந் தனைநேயம் வைத்துமிக வளர்ப்ப [னன்றே.

விதிகளெலாஞ் செய்யாமல் விடுத்தோனை யான்மாவை மிகத் தேர்ந் தோனுய்ப், பொதுவெனுமா மறைபுகலு நிடேதமெலா மாநந்தம் பொருத்து விக்குந், திரமருவு கருமமாத் திரநோக்காச் சோம்பனுக்குச் செய்கை யாதுங், கதுவுறவேண் டாவென்று புகல்வோன்றன் மொழிகண்மனே கரங்க ளாமே. 35

தத்துவத்தை யனவரத மனுசந்தித் திடுமுனியாஞ் சார்வ பௌம, னெத்தபடி நிற்பினுமெல் லாஞ்செயினுந் தாவனே வொண்ணு னுமா, வித்தரைபெல் லாங்கைக்கொண் டரசாண்டு

வேண்டியவா திருக்கும் வேந்த, னத்துறுமன் னுயிர்களா லேவல் கொளற் கெக்கா னு மரிய னுமே. 36

பரமார்த்த நோக்கமுடை யவனுக்கு முன்னெடுபின் பண்ணப் பட்ட, தருமாதன் மத்தொழில்க ளாற்சம்பத் தேவிபத்தே சற்று மின்றும், பெருமேகம் பொழிதருநீர் முழுக்கானும் வெப்ப மிகப் பெறுத லானு, மெரிமேவு பாலைவனத் தின்பயிருக் கேற்ற முட னிழிவு மின்றே. 37

ஒல்லைவினை யானுண்டாஞ் சம்பத்தே யாதல்ல தொழிந்த தாதல், வல்லையனு பவித்தோனுப் புருடன்மிகு திருத்தியினை மருவு வானு, லல்லல்செயும் பாம்பாட்டி தன்வயத்தி லகப்பட்ட வரும்பு யங்கம், புல்லியவ னியற்றுதண்ட விதிகளைநீங் குறச் சமர்த்துப் பொருந்துங் கொல்லோ. 38

ஆன்மவறி வுடையவன்முற் கருமபரி பாகவச மடைந்தோனேனுந், தான்மருவு தன்பரம வவதியிதா மெனத்தேறித் தளர்வு நண்ணுன், கான்மருவு வழிச்செல்வோன் கால்வருத்த மெய்துகினுங் கிராமாந் தத்தின், மேன்மருவு வழியளவைத் தெளிந்துவகுந் திடைவிசன மேவா னன்றே. 39

அகம்புறமும் பரமான்மா வொருவனே யாமெனநன் கறிந்த ஞானி, மிகுந்தவிச னமதுறினு மோர்சிறிதுங் கிலேசமே மேவா னன்றே, செகங்கலங்கு போர்முகத்தே விசயமுற வொருநோக்கா ந் தீர னுன்னே, னுகம்பரவு மொட்டலரால் வருந்துறினுங் கிலேசமற்ப முறுவ துண்டோ. 40

ஞாலமதி னுறுவிபவ நனிபரம வற்புதமாய் நண்ணுமேனுஞ், சாலவத னதுவாய்மை தனையறிந்த மாதீரன் றனைமயக்கா, கோலமட வரல்வேடங் குரம்பையின்மே லலங்கரித்துக் கொள்ளா நின்றேன், கேலவினத் தாற்றனைத்தோர் விடலையையா யினுமயக்கக் கிட்டா னீடே. 41

அகத்தினிரந் தரமேலா யிலங்குகின்ற வான்மவடி வாய்நிற் போனே, யிகப்பொருள்க டமினுளு முன்போல விசனமே யியைவதில்லை, யிகழ்ச்சியறத் தெய்வகதி யானிதியோ ரிடத்துற்று விலம்பா டுள்ளோ, னுகத்தினின்முன் போலெளிய னெனக்கருதிப் புகன்றுலவ துண்டாங் கொல்லோ. 42

பெரியவிழி மருவுறுதன் மகிமைசெறி பெரியோனைப் பெரு ஞானத்துக், குரியசுப குணங்களலங் கரிப்பனபோ லுஞ்சுயம் வந்தொன்று நிற்கு, மரையனவன் றன்வயனுய்ச் சுகிர்தனுயிருக் கினவற்காளா ேனரும், புரையருமவ் வரையனையே தானேவந் தொன்றிமிகப் பொலிவ ரன்றே. 43

அஞ்ஞான மேயில்லை யிவ்வுலக முளதாமென் றறைவ தெங்கே, விஞ்ஞான வடிவாஞ்சீ வேசதே சிகரெனச்சொல் விகற்பஞ் சேய்த்தா, மெய்ஞ்ஞான வொருசுவையாய்த் தனித்துநிரு மல மாகி விளங்குந் தானு, யெஞ்ஞான்றும் பரிபூரண கேவலமாம் பிரமமே யானுகின்றேன். 44

சமாதியவத் தையிலுதித்தொற் றைக்கொம்ப னுபதேசஞ் சாற்றலாலு, மமானமயப் பரமசிவேந் திரனெனுந்தே சிகவரி யானனுஞ்ளை யாலுஞ், சுமாவிருக்கச் சதாசிவமா தவனேதிவ் வத்துவிதச் சுவைப்பூங் கொத்தே, யெமாலுடைக்கு மகமுகமா மறிவுடையோ ராதரத்தா லெய்தற் பாற்றும். 45



சுத்தசதா சிவயோகி வரியானே தியவிந்தத் தூய நன்னூல், புத்திநல முடையோர்க்குற் பவநோய்க்கோ ரவுடதமாய்ப் புகல லாகுங், கொத்துறுபா தகங்களுக்குக் கடுவாகு முபநிடதக் குறிப் பாமேலா, முத்தமமா மாநந்த வமுதநிறை குடமாமென் றுரை ப்பர் மேலோர். 1

துய்யசதா சிவப்பிரம மெனுமுனிவன் வடமொழியாற் சொல்லப்பட்ட, செய்யவத்து விதரசமஞ் சரிநூலைச் செந்தமிழ்ப் பாச்செய்து தந்தான், வையமிசைப் பொலிகழனி மாநகர்வாழ் சோதிலிங்க வடிவ மான, வையன்முத்தி ராமலிங்க குருபானென் னகம்வாக்கு மமைந்து நின்றே. 2



## ஆத்மவித்யா விலாசம்.

வடதருவி னீழலிலே வாசமது புரிந்தருளும் வடிவி னனைப், படுதரமாம் விஞ்ஞான முத்திரையி னெடுதிகழ்பங் கயக்கை யானை, முடிவிலரு டருமரிய வொருவனுந் தேசிகனை முதன்மை யானைத், திடமுளகை வல்லியவா னந்தமெனுங் கந்தலத்தைச் சேவிப் பாமே. 1

நிரவதியாஞ் சமுசார நீரதியி னிதம்விழுந்து நெரிய லான
நரவுலகர் தமைக்கடத்தி யொளிருமெழி லுவாவாய் நாட லாகிப்
பரமதபே தனமான கூடமெனு மாயுதமாய்ப் பகரலான[றேனே.
பரமசிவேந் திரனெனுமென் னுரியன்றன் பாதுகையைப் பணிகின்

பரமசிவேந் திரனுமென் றேசிகன்றன் றிருவருளின் பாங்கி னாலே, பரமசுக திவ்வியமா மகிமையினை யுணர்ந்துபினம் பளகற் றோங்குந், திரவெனிலே விசிராந்தி தனையடைந்து ரசமறவுஞ் செறிய லான, வரமுறுமிச் சிலமொழியால் வத்துவினைச் சிறிதுயான் வழுத்து வேனே. 3

நிருபமமாய் நித்தியமாய்த் தொழிலிலதாய் நிட்களமாய் நீத்து மாயை, யரிகுணமே யிலதான வடிவாகி யடர்விகற்ப மனைத்து நீத்தே, வருசுகமா தியினசுத்த மருவாதாய் ஞானமய வடிவமான, பரமமதா மான்மாவு மொருநிலையா யொளிருமெனப் பகர்வர் மேலோர். 4

தன்னுடைய வவித்தையினாற் றளையுண்டே கருமமவை தம்மை நாளு, மென்னுடைய தெனப்புரிந்திங் கேங்கியே கிடந்துபின மீச னேக்காற், பன்னவுறுஞ் சகசீவ பரமெனுமிப் பந்தமதைப் பறித்து வீசித், தன்னுடைய வான்மாவின் ஞானத்தான் முனிவரனுஞ் சயிக்கின் றானே. 5

மாயையின்றன் வயத்தினாற் சுழுத்திதனை மருவியே மாழ்குநாப்பண், ணுயிரம்புன் சொப்பனங்க ளவைநோக்கி யலறியே யமரும் வேலை, தூயகுரு பரன்வசன மதனினாற் றுயர்தருமச் சுழுத்தி நீங்கி, யேயொருவ னெங்கேனு மானந்த வாரிதியி லிலங்கு மாதோ. 6

பருமரிய பிரகிருதி யியல்பதனை யொழித்துநிச படிவ மான, திருமருவு சத்தான வானந்த வறிவதனைச் சேர்ந்து மேலாங், குருவரனற் கருணைபொழி திருட்டியினாற் பெருமையினைக் குலவ மேவி, யுரமதியை யுறுஞானி யுலவலறு முவப்பினொடு முலவுவானே. 7

தேசிகன்றன் றிருவருளாற் சச்சிதா னந்தமெனத் திகழ லான
மாசகன்ற தன்வடிவிற் படிந்திடுபுந் தியனுகி மவுனி யாகி
வீசுகின்ற பேரகந்தை விட்டுவிழுச் சுகவியல்பை விரவி னேனை
யாசகந்தன் மீதிலே யெங்கேனு மோரறிஞ னமர்கின் றானால். 8

சற்குரவன் கருணையெனும் பெருந்தரங்க சம்பந்தந் தனி னாற் றேன்று, நற்குணநல் லியல்புறுநல் லதிசயசீ தலமனத்த னை வோரோர், சிற்குரிய யதிவாளிங் கெல்லையொடு மூவமை யற்ற சித்தின் பத்தே, தற்குரிய விட்டமது தனைப்போலத் தினம் ரமித்துச் சரிக்கின் றானே. 9

சீராருங் குருபரன்றன் கருணையெனுந் தினகரன்பொற் றே சி னாலே, காராரு முள்ளிருளென் னவித்தையினைக் கறையறவே கடந்தோ னை, வோரும் ஞானவரன் லீலையினை யெய்தியெங்கு மெலேயே யில்லா, நீராரு மானந்த நீரதியி னிதம்படிந்து நிகழ்கின் றானே. 10

செனித்துவருங் கிரமமதின் மாறாக வைம்பூதத் திரள்கடம் மை, யனித்தமென நாடோறும் புந்தியினு லியமது வாற்றி மே லாய்த், தனித்தபரி சிட்டமதா மாத்துமதத் துவத்தையொரு தடையில் லாமன், முனித்திரளின் வரன்றியான முற்றியருட் சாந்தனுய் முதிரு மாதோ. 11

இவ்வுலகம் யாவுமொரு சாரமற்ற தன்றியுமா யிகமே யென் னுத், தவ்வின்மனந் தனிற்றேறி யாசையினை வேரறுத்த சதுர னுகித், தெவ்வெனும்புன் மதமான மற்சரத்தை யறுத்தெரிந்த தெளிஞ னை, வவ்வியமில் லோரொருவ னனுதினமுஞ் சஞ்சரி த்திங் கமர்வா னன்றே. 12

மலமிலநல் லான்மாவி லொருசிறிது முண்மையதாய் மாயை யேனுங், குலவுமதன் காரியமா மேனுமிலை யெனவுளத்திற் குறி த்துள் ளோனு, யுலவலறு மானந்த நிறைந்தொளிரும் யோகியெ னு முயர்ந்த மேலோ, னிலவுதன துள்ளமதிற் றிருத்தியொடு நித் தியமு நிகழ்கின் றானே. 13

அகமதொடு நீயெனவே யழற்றுகின்ற வபிமான மறுத்தோ னுகி, மகிழளிக்கு மனந்தசன வாசார மதுதனையே மருவி னேனு ய்ப், பகையதறும் விமலமதா மானந்த வாரிதியிற் படிந்தோ னுகி, யிகமதுறும் பாலனைப்போ லேகமதா யெஞ்ஞான்று மிலங்கு வானே. 14

கருமமதன் சாலமதைத் தணந்தவனு யந்தகனுய்க் காதி லானு, யருமைசெறி சடனுகி யான்மாவில் ரமிப்பவனு யமல மான, பெருமைமிகுந் துறவிறைவ னேரொருவ னனவரதம் பிறங்க

லான, தருமிகுதி யுறுவனத்தின் கோணமவை தமின்மிகச்சஞ் சரிப்பா னன்றே. 15

தலைமைமிகு சாந்தியினற் றிரமுறவே நனிநிதமுந் தழுவன் மேவி, யலைவுசெறி யன்னியத்தின் ஞானவுதா ரங்களெலா மதம தாக்கி, நிலைமையுறு ரசமதனை யுணர்ந்தவனுய்த் தனியவனுய் நிமல ளுகி, யெலையிலிரம் மியமாந்தன் னுனந்த மஞ்சமதில் ரமிக் கின் ருனே. 16

விடையமெனும் பகையவனை வேரினெடும் பெயர்த்தெரிந்த விமல ளுகி, யடையபனுறும் வயிராக வமலவிழுச் செல்வமதை யடைந்தோ ளுகி, யிடையதறத் தன்னுடைய வான்மசுக மகிண்மை யெனு மினிய நாட்டிற், றடையதறத் துறவிறைவ னனவரத மிக மிகச்சஞ் சரிப்பா னன்றே. 17

வெய்யதின கரனிடத்திற் சீதமிக வுற்றிடினும் விமல மான
செய்யவிம கரனிடத்திற் ருபமிக வுற்றிடினுஞ் சிகியின் மாட்டு
மையமறக் கீழ்நோக்க லுற்றிடினு மாயிகமென் றறிந்தோ ளுகி
மையலறுஞ்சிவன்முத்தன் விஸ்மயத்தை மருவாது மலருவானே.

பொல்லாத வவித்தையெனும் வயிரியினை விசயமிகப் புரிந் தோ ளுகி, நல்லோர்க ளுறுஞான மாதங்க மத்தகத்தி னடிப்போ னுகி, யெல்லாவற் றினுஞ்சிறந்தி ரம்மியமாஞ் சமரசநல் லின்ப மான,வில்லாரும் விடதனிற் றுறவிறைவன் வீற்றிருந்து விளங்கு வானல். 19

துட்டவகங் கிருதியெனுந் தோடமதைத் துடைத்தோனுய்த் தூய வாய, மட்டில்சமா கிதமனத்த னுகியே பூரணமா மதியின் மேவுஞ், சிட்டமுறுஞ் சீதளமாந் தகைமையினைச் செறிந்தவனுய்த் திகழின் பான, நட்டமறு சத்தியசித் தின்றசிக னேரொருவ னடிப்பா னன்றே. 20

தனதுசுகந் தனைப்பருகு பரவசனு யோரொருவன் றனிவீ டெய்தித், தனதுமனஞ் சென்றவணஞ் சிலவிடத்திற் றியானமே சரிப்போ ளுகி, யுனவரிய சிலவிடத்திற் கானமிகப் புரிபவனு யொருவ ளுகி, நனியினமுஞ் சிலவிடத்தி னடனமதைத் தடைய தற நவிற்று வானே. 21

அங்கமொடு களங்கமிக வுற்றிடினு நோக்காதிங் களவி லாத, சங்கையுறு சங்கற்ப விப்பிரம மனைத்தினையுந் தணந்தோ ளுகிப்,

பொங்கியெழுங் காரியத்தி னீட்டமதைப் போக்கினனாய்ப் பொலி யும் பிராஞ்ஞன், றங்கிடுவ னெங்கெனினும் பூரணமா மெல்லையி னிற் றனிய னாகி. 22

சஞ்சலமென் மனக்குரங்க மதுதனைவி சாரமென்பா சத்தி னாலே, யஞ்சிடாநன் ருகநிதம் வயம்புரிந்தம் மாரணமா மடவி யூடே, சஞ்சரிக்கு மெங்கெனினு மோரொருவன் சன்மயனாய்ச் சாந்த னாகித், துஞ்சலினைப் புரிந்திருப்பன் றன்னுடைய வெளிவீட்டிற் றுலங்க மாதோ. 23

வயம்புரிந்த தீரமன மெனுங்கூர்மை வலிமிகுத்த வாளி னாலே, பயந்தரும்வெஞ் சித்தமெனும் பெரும்புலியைப் பலியாற் றிப் பயமி லாத, நயம்புரியு மாரணிய மதுதனிலே யோரொருவ னலம தாகச், சுயந்தனிச்சை போலுலவி யனுதினமு மங்கல மாய்ச் சுடர்வா னன்றே. 24

சற்புருட ரிருதயமென் ருமரையை விரிதல்புரி தந்து மே லாந், தற்பிரம ஞானமதை யருள்பெருமை யுறுமோரோர் சாந்தி மேய, வற்புதநற் றுறவிறைவ னெனுமருணன் றேடமொன்று மணுகா னாகிச், சற்பிரிய சிற்ககனந் தனினொரு மருளொடுஞ்சஞ் சரிக்கின் றானல். 25

இவ்வுலகந் தனைத்தோற்றி வைக்குமெழிற் காரணமா யில கஞ் ஞான, வவ்விருளை மாற்றுவிக்குங் கிரணமெனு ஞானமதை வாய்ந்தோ னன, செவ்வியசுத் தமதான விந்துவென்மு னீந்திர னுந் தேவர் போற்று, மவ்வியமி லறிஞனவ னகண்டமெனும் பத மதனி லலர்கின் றானே. 26

தன்னுடைய வானந்த வமுதமதைத் தெளித்தலினாற் றன துண் மேவி, யின்னறருஞ் சந்தாப சந்ததியை யிறையளவு மில்லா தோட்டி, மின்னுமுயர் யோகியெனு மம்புதஞ்சஞ் சலமில்லா விருத்தி யோடு, மென்னவிசித் திரமன்னோ சிதம்பரத்தி லென் றுமே யிலங்கு மாமே. 27

அளவின்மலர்ச் சுகந்தமன்னோ கரமான சஞ்சார மதனி னானே, வளர்சிரம மனைத்தினையுந் தணந்துமிக நிருமலமாய் வயங்க லான, தெளியகநற் றுறவியெனுங் கவின்வாய்ந்த காலிலியுஞ் சித் தே யாகிக், களிமிகுமங் கானகத்திற் கவலையற வுலவிமிகக் களி க்கு மன்றே. 28

முத்தியெனும் ரசம்வழியும் பழம்வாய்ந்து முரஞ்ஞன முமல நீத்த, சத்தியவிஞ் ஞானமனோ கரமான வழகுநிறை தளிரும் வா ய்ந்தே, சுத்தபய மற்றொளிரும் வித்தார மாவனத்திற் றுகளில் லோரோர், புத்தமுத யதியெனுங்க லாபநனி விளையாடிப் பொலி யுந் தானே. 29

சாரமற்ற புவனமெனு மருத்தலத்தைச் சேய்மையினிற் றணந்து மேலாஞ், சாரமுற்ற வானந்த வுதகநிறை சின்மயவிச் சரசி னூடே, கோரமற்ற பரமஹம்சன் யாவனோ வோரொரு வன் குளித்து லாவித், தீரமுற்ற தன்மனத்தி னிச்சையினிற் றிருத்தியொடுந் திகழ்வன் மாதோ. 30

நிகிலநல வாகமங்க ளெனுந்தளிர்கண் மிகமிகவு நிறைந்த தான
நிகமமுடி முடிபான சீதளமா மலர்கணிறை நீண்ட காவிற்
சுகமுறுமின் னதிமதுர சுத்தமனோ கரமான சொற்க ளார்ந்த
திகழுமெதி யிந்திரனென் கோகிலமுந் தினம்பாடித் திரியு மாமே.

மோகமத மிகநிறைந்த குஞ்சரத்தை யதமாக்கி முடிவில் லாத, சோகமது தருஞ்சருவ பாபமெனும் பெரும்புலியைத் தூர நூக்கி, யேகமதை யறிந்தொளிருத் தமனன வுயர்ந்தசிங்க மிறு மாப் பெய்தி, வேகமதை யொழித்தினிய வித்தார கானனத்தில் விளங்குந் தானே. 32

அஞ்ஞான மெனுமரிய மிருகவர னேறவொண்ண வமல மான, விஞ்ஞான வுத்துங்க சிருங்கசிக ரம்பொலியும் வியன்றே யத்தே, சுஞ்ஞான சலிலமதிற் சீதளமா மங்கமொடுந் துறவி யான, செஞ்ஞான மதம்பொழியுங் கலபமது சஞ்சரித்துத் திகழு மோரே. 33

நாசியின்றன் னுனியதனி லனவரதந் திருட்டியினை நாட்டி னோனு, யேசலுறு நாமமுத லிவையினின்றும் விருத்திகளை யிழு த்திட் டோனுய்த், தேசுறு நதியினருங் கரைகளினிற் றத்து வத்தைத் தியானிப் போனு, யாசதரும் பெருந்துறவி யெங்கேனு மோரொருவ னமர்கின் றுனே. 34

மன்னுதிசை யதனைநனி யம்பரமாய் மருவிமகா மவுனி யாகித்
தன்னுளெழு மாசையின்மை தன்னாலே யலங்கிருத சாந்த னாகிப்
பன்னுகர தலம்பயிக்க பாத்திரமாய்ப் பற்றியொரு படிறி லாமற்
றுன்னுதரு தலநிலய மாமுனிவன் மங்கலமாய்த் துலங்கு வானே.

சனங்கனற்ற நதியினுடைத் தீரமமை மண்டபமாந் தனிமை வீட்டின், மனங்குளிரும் கவின்வாய்ந்த புளினமதா மனதினுக்கு மகிழ்வு காலும், வனம்பெருநற் சயனமதிற் சமஞ்சாந்த மின்பறி வாம் வத்து வூடே, தினம்விழித்துத் துறவிறைவ ஞேரொருவ னித்திரையே செய்வன் மாதோ. 36

பூதலமே மிருதுவினு மிருதுவதாஞ் சயனமதாய்ப் பொலிவ னுகிச், சீதளமாம் வாதமதே முக்கியசா மரமாகிச் செறிந்து பூ ன்ற, கோதிலதா மதியமதே தீபமதா யுடையோனுய்க் குளிர்ந் தோ னுகித், தீதிலனு யெதிராச சேகரனிங் கோரொருவன் றிக ழ்வா னம்மா. 37

அதிவிமல நதிவாரி நாற்புறமும் புடைசூழ்ந்தே யலங்கா ரிக் க, வதனடுவு ளதிவிபுல சிலாதலமாம் பலகையின்க ணருமை யா கப், பொதியமலை தனிலுதித்த தென்றனனி மந்தமந்தம் பொலி ந்து வீச, வெதியிறைவ ஞேரொருவன் சுத்தமதா நித்திரையோ டிருப்பா னன்றே. 38

மனமதனிற் றினந்தினமு மேகமதாம் வத்துவினை மகிழ்வி னேடு, மனனவனு சந்தானம் புரிபவனுய் மகத்தான மவுனி யாகி, மனைகடொறுங் கரபுடத்தில் வந்தவந்த பயிக்கமதை மாந் தி ஞேனு, யுனவரிய சடவடிவ ஞேரோருவன் றெருவதனி னுலவு வானே. 39

சேடமறச் சகமதனைச் சிறப்பாகக் கிரமலயஞ் செய்தே பின் னுஞ், சேடமுறு மகண்டமெனும் வத்துபர தந்திரனுய்த் திகழ்வ னுன, தேடரிய வோரொருவ னுகர்வினையான் முகமதனிற் செ றிவ தாகித், தோடமருங் கவளமதை யயின்றுதினம் விளையாடித் துலங்கு மாங்கே. 40

தன்னுளத்திற் றிரட்டியவா னந்தகோ சம்மதனைச் சார்ந் தோ னுகி, யுன்னுமெழிற் சந்தனசீ தளத்தையுறு மிதயமதை யுடையோ னுன, பன்னுபுகழ் யோகியொன்று நிந்தனையே பண் ணுனுய்ப் பாரின் மீதி, லன்னியம தொன்றினையுங் காதலித்துள் ளானந்த மடைந்தி டானே. 41

அருள்பொழியுஞ் சாத்திரத்தின் சாலமதை யதிதூரத் தக ற்றி மேலா, யிருளிரியு நன்றுன விவகார மதுதனையு மெலாவற் றுனு, மருளதென விடுத்துமிகப் பூரணமாம் பதவியினை மருவி

யோகி, யுருளசைவ தில்லாத தீபமென வொளிர்ந்திடுவ னுண்மை தானே. 42

திருணமொடு பங்கமிகப் பூசிமலிந் திடுமரிய தேகி யாகித், திருணநிகர் தாவிசுவந் தனைநோக்கி மருளாத தெருள ஞன, வருணிறைய வுறும்யோகி சரைமாண மற்றகவி னகத்தின் மேவிப், புராணவிசி ராந்தியுற்றுக் கானனத்திற் றனியாகப் பொலிவானம்மா.

எவ்வுருவ மதுதனையும் பார்த்திலனுப் வார்த்தையொன்று மியப்பா ணுகிச், செவ்வியநல் வசனமதைச் சிறிதேனுஞ் சிரவணமே செய்பா ணுகி, யொவ்விலவின் பூமியினி னிட்டையினை யெப்பொழுது முற்று ணுகித், தெவ்விலவிவ் வருந்தவனென் மாயோகி காட்டமெனச் செறிகின் றனே. 44

சாதிமுத லபிமான மற்றவனு யுயிர்களிவை சருவத் தூடு, மோதரிய பூரணத்தைக் காண்பவனு யகிலார்த்த வுண்மை தன்னைச், சாதுரிய மாகவறி சதுரோனு மெதிராசன் சாந்த ணுகித், தீதகலு மூடனைப்போற் கூடமதாய்ச் சஞ்சரித்துத் திகழ்வானன்றே. 45

வாகுவின்றன் மூலமதைத் தலையணையாய்ப் போர்வையதும் வான மாக, வாகின்ற பிருதிவியைச் சயனமென வனுதினமுமாக்கி ஞேனு, யூகமொன்றி விரதியெனும் வனிதையினை மிகத் தழுவ லுற்றோ ணுகிச், சோகமின்றி யாநந்த பாவசனு யோரொருவன் றுயிலு வானே. 46

சென்றொழிந்த பேதவா தனைகளொடுந் தன்னுடைய சிறந்த ஞான, மென்றொளிரு மழகுபொழி யுல்லாசப் பொதுமகளி ரிவர்களோடும், வென்றபுகழ் நிறைமறையின் முடிவாமந் தப்புரத்தில் விரிவ தான, நன்றறியு மெதிராச ஞேரொருவன் மிகரமித்து நடிப்பா னன்றே. 47

செய்பவயி ராகமெனும் வித்தார மார்க்கமதைச் செறிந்த தாகி, மெய்யுறுவிஞ் ஞானமெனு மிக்கொளிருந் தீபமதான் மிளிர்வ தான, பொய்யறுநற் றத்துவமென் மாளிகையிற் படிபுகழப் பொலிய வேறித், துய்யவொரு துறவிறைவன் முத்தியொடு நித்தியமுஞ் சுகிப்பன் மாதோ. 48

அருணிறையும் விசனதல வுற்பலமா மாலையையு மழகு வாந்த, தருணியரி னிச்சையென்ப தற்றதொரு கற்பகவல்லி தனை

யுஞ் சீராம், பொருணிறையு மபமான வமுதமெனுங் குடிகையை யும் பொலிய மேலாந், தெருணிறையு மான்மாவைத் தெரிந்த வனிங் கோரொருவன் சேர்ந்துய் வானே. 49

பொல்லாத தோடமெனும் புந்தியினு னிடேதமதைப் புரி ந்தி லானு, யல்லாத வருங்குணமென் புந்தியினற் சிறிதேனு மடைந்தி லானு, யுல்லாச மாயையின்றன் காரியமிவ் வனைத்து மென வுணர்ந்து மேலா, நல்லோனென் மாமுனிவ னேரொரு வ னெதுமலினை நயந்து ளானே. 50

சென்றவெவை தமையுமொரு சிறிதேனு நினையானுய்ச் செ றிப வாகி, நன்றுவரு பவையினையுஞ் சிறிதுமுளத் தெண்ணானுய் நயன நோக்க, நின்றவிவை யெவைதமையு நோக்கலொடு நினைத்த லின்றி நிமல னுகி, வென்றசமத் தார்த்தசம ரசனுன வோரொரு வன் விளங்கு வானே. 51

நிகிலகர ணங்களையு நிக்கிரக மிகப்புரிந்த நெறிய னுகி, யகில விட யங்களின்ற னுசைதமை யறுத்தெறிந்த வமல னுகிச், சகல நல வுத்தமமா மெல்லையெனுந் திருத்தியினைச் சார்ந்தோ னுன, புகலுபுக ழெதிவரிய னேரொருவன் சஞ்சரித்துப் பொலிவா னன்றே. 52

ஒல்லையுறு மெதனையுந்தி யாகமது வொருபொழுது முனுற்று னுகி, யல்லலற வணுகாத வதனையென்றும் விரும்பாத வசல னுகி, நல்லதுறு துறவிறைவ னேரொருவ னுயாச நணுகா னுகித்,தொல் லையற வுண்ணிகழு மாநந்த மனுபவித்துத் துயில்வன் மாதோ.53

இன்பநிறை வுறுமரிய ஞானமெனும் பெருநனவ தென்ன லான, துன்பமறு நல்விமல வேதோமன் பதவியினைத் தொடர்ந்து மேலா, மன்புநிறை துறவிறைவ னேரொருவன் பந்தமொழித் தகன்றோ னுகித், தன்புனித விச்சைவசந் தனியனுய்ச் சஞ்சரித் துச் சமைவா னன்றே. 54

இனிப்புறமிவ் வகிலவித விசுவவிகா ரங்களெல்லா மில்லா தான, தனிப்பெரிய வத்துவினிற் படிந்துலய மானமனத் தானே யான, மனப்பகைய தெனப்புகலு மடிந்தாா கங்களுக்கு மன்ன னுனேன், வனப்புறுமன் னியமதன பேட்சையே யின்றிநிதம் வயங்கு மாதோ. 55

பெருங்குரவன் கருணைபொழி திருட்டியினு னன்ருகப் பெற்ற தான, வொருங்குமுடி வறும்பெரிய சேதனத்தி னுகார முற்ருே னுகி, நெருங்குமலச் சகவிகற்ப பேதமெலா மிகமிகவு நெரித்தோ னுன, விருங்கருணைப் பரமம்ச னேரொருவ னரிதாக விலங்கு வானே. 56

வருணமொடு மாசிரம விவத்தையினை யெடுத்தெறிந்து வளமதாகிப், பொருணிறையும் வித்தைகளை யனைத்தினையும் வெகுதூரம் போக நூக்கிப், பூரணபரி பூரணவா னந்தசித்து மாத்திரமாய்ப் புலன்க ணீத்துத், தெருணிறையுந் துறவிறைவ னெஞ்ஞான்று நின்றுபரி சேடிப் பானே. 57

எவ்விதமாம் பொருள்களுக்கு நாசமதை யின்பமுட னியற்றி னேனு, யவ்விதமே நுகரவரும் பெருவினையை யத்தியந்தமயின்ருே னுகிச், செவ்விதமாந் தேகபந்த மனைத்தினையுஞ் சிறப்பாகத் தீர்த்தோ னுன், வொவ்விதமே செயும்பிராஞ்ஞன் கேவலமச் சிவமாயே யொளிர்வா னன்றே. 58

அசைவினெடு மனந்தமென்ப தின்றியென்று நாமமொன்று மணுகு ருதா, யிசைவினெடுஞ் சந்ததமு மானந்த போதகன வியல்ப தாகி, யிசிவுறுமெவ் விகற்பமது மில்லாதாய் முதலதுவா யேக மாகி, நசிவறுநற் பரமசிவ தத்துவமாம் வத்துவெதோ நடிக்கு மாமே. 59

அக்கரமாய்ச் சரையிலதா யெஞ்ஞான்று முதயமதை யணுகாதாகித், துக்கமெலாங் கடந்ததுவாய்ச் சுத்தமதாய்ச் சூக்கமத்துஞ் சூக்க மாகித், தொக்கவபூ ருவமாகி விஞ்ஞான மயமாகித் துகளில் லாதாய், மிக்கபர தத்துவமாம் வத்துவெதோ வொன்றுநித மிளிரு மாலோ. 60

சுகமதினுஞ் சுகமதுவா யமரமொடுந் தூரமென்றுந் தொடரா தாகிச், சகமதெனுஞ் சமுசார சாகரத்தின் றரணமதிற் சார மாகி, யகமலரிற் சமரசமாய்ப் பயம்பார மணுகாதா யரியதாகிப், புகழுலுறு தத்துவமா மேதோவொன் றனுதினமும் பொலியு மாதோ. 61

அரசமதாய்க் கந்தமொடு முருவமதை யணுவளவு மணுகாதாகி, விரசமதாய்ச் சத்துவத்தொ டறக்கொடிய தமசினையு மேவா

தாகித்,தெரிசுயமா யுவமைபய மற்றெளிருந் தத்துவநற் றெளிவ தாகி, விரிசுவையா மேதோவொன் றனுதினமு நித்தியமாய் விள ளங்கு மன்றே. 62

குருபரன்றன் கருணைநிறை திருட்டியினு லொருசிறிதுங் குறையுருத, பருமறுபத் திரண்டெனுமிவ் வெண்களுறு மறுசீ ராம் பாக்க ளாலே, யருமறையின் சிரங்களினிற் புகன்றருளு மரு மையினு மருமை வாய்ந்த, விரிபொருளின் சாரவடி வருத்த மதை வீடடைய விளம்பி னேனே. 63

சீராரு மாத்துமவித் தையின்விலா சம்மெனவே செப்ப லான, வேராரு நூலிதனைத் தினந்தினமு நல்லறிஞு னிடைவி டாம, னோராரு மனமதனின் மனனித்துப் பரான்மவித்தை நேர்ந் தோ னுகிப், பாராரும் பரமார்த்த மதைவிரைவி லிருடுறந்து பற்று வானே. 64

ஆத்துமவித் தையினையருள் பரமசிவேந் திரகுருவி னடியே போற்றி, யாத்துமவித் தையினையுறுஞ் சதாசிவேந் திரனுலே யாற்ற லான, வாத்துமவித் தையினையுற விரும்பினர்க்குப் பூர ணமா மமுத மாகு, மாத்துமவித் தையின்விலா சம்மெனுமிந் நூன்முடிபை யடைந்த தாமே. 65

## ஸ்ரீகுமாரதேவர் சாஸ்திரம்.

சோகமே யின்றி யிருந்தனன் வேந்தன் றென்றலும் பார் பொது நீக்கி,யேகமாச் செங்கோ லெங்கணுஞ் செல்ல வெண்டிசை விசயமுஞ் செய்தே, மாகநா டென்னப் போகமே துய்த்து மடந் தையோ டிருந்தன னென்றுன், வாகைவே லவன்பி னென்செய் தா னென்ன மறையவர்க் குயர்முனி வகுக்கும். 1

மனைவியுந் தானு மோர்நினை வாகி மாறுபா டின்றியோர் காலுந், தனையுணர் யோகி தந்தைதாய் கடவு ளங்களை யனுதின மிறைஞ்சி, யனையவ ருரைத்த நெறிதனி னடந்து மருத்தங்கண் மனதினிற் றரித்தும், வினையம தடனே நான்முறை யவரை வினவியுஞ் சிலபகல் போக்கி. 2

தனியிட மதனி லிருந்திரு வர்களுந் தங்களிற் றுமுணர்ந் துசாவித், துனிசெய்மா மாயைப் பிறப்பது நீங்கிச் சுகமதை

யடைந்தனு தினமு, மினிமைய தாக விருக்கலா ஞானத் தென்றெணி ஞானிகட் சார்ந்து, நனியவர் பாத பூசனை புரிந்து நாடொறும் வினவினர் நன்றாய். 3

இருவரி லரசன் றனக்கறி வோங்க விருவகைச் சார்பையு மகற்றிக், கருவுடற் காவ றனையுங்கை விடுத்துக் கருத்தசை யாது மெய் யுணர்வை, மருவிடி லகப்பற் றற்றுமேல் வீடு வாய்த்திடு மதற்குமெய்ஞ் ஞானக், குருவரு ளின்றி விளங்கிடா தெனவே கொண்டனன் மனத்தினிற் றுணிவே. 4

சீவர்க ளிடத்தி லருள்சிவ பத்தி திருந்திய துறவு மெய்ஞ்ஞான, மாவதோர் வடிவாம் வேதமா முனியை யமல்வா ரணியத்தி லடைந்தே, தேவர்க டேவே துன்பமோர் காலுஞ் சென்றிடா முத்திதா னெய்திச், சாவதும் பிறப்பு நீங்குமோர் நெறியைச் சாற்றெனத் தாழ்ந்திட முனிவன். 5

இருவகைச் சார்பாம் புறப்பற்றை நீக்கி யிச்சையின் மீட்டதினினைவு, மொருவியே யுடற்கா வலையுங்கை விடுத்தே யுட்கர ணங்கள்வா தனையுங், குருவரு ணெறியே யொடுக்கிடில் வீடுங் கூடுந்தா னாகவே பவத்தின், கருவழிந் திடுமிந் நெறியைநீ விரைவிற் கைக்கொண்டு செல்லென வுரைத்தான். 6

அந்நெறி குருவா லையமுந் திரிவு மகன்றிடத் துணிவதாக் கேட்டு, முன்னெறி யான வரசியற் கையினின் முயன்றனன் சிறிதுநா ளொருநாட், பின்னெறி யதனை நினைந்தனை வரையும் பெயர்ந்திட விடைகொடுத் தரசன், மன்னெறிக் கோல மகன்றந்தப் புரத்தில் வதிந்தன னொருவனுய்த் தனித்தே. 7

ஆண்டதோ ரரசு தனிலும்போ கத்து மாசையற் றேனினி வேண்டேன், மாண்டதோர் வனத்தி லொருவனுய்த் தனித்தே மனத்தசை வறுத்துவீ டடைவேன், பூண்டவென் மனமிங் கினித்திரும் பாது போகத்தைப் பொருளென வெண்ணி, வேண்டலனீங்க ளரசனு வேறே விதித்துக்கொ ளுங்களென் றுரைத்தான்.

இவ்வர சியற்கை யற்பமற் றிதனு லெய்திடுந் துன்பினுக்களவின், றவ்வகை யதனை யூகமின் மையினு லறிகிலிர் நீங்களின் பென்றே, யெவ்வகை நினைந்தீ ரினியெக்கா லுங்கட் கிதின்ப மலதெனத் தோன்று, மொவ்வமற் றிதனுக் கூகமே தோன்று துங்களுக் குலகயூ குதிக்கும். 9

என்றுமற் றனேக மாவிரித் தாச னெடுத்தமைச் சர்கடமக் கியம்பி, நின்றுபின் னவரை நிலுமென நிறுத்தி நிதிதுனும் பொன்மனை விடுத்தே, சென்றுபின் னகர வீதியி னடக்கத் திரண்டனை வர்களும்பின் றொடர்ந்து, வன்றுய ரடைந்து வாடியே மெலிந்து வாரியி னோசையி னழுதார். 10

அவரவர் வினையி னவரவர் வருவா ரவரவர் வினையள வுக்கே
யவரவர் போக மென்றதே யாயி னுருக்கார் துணையதா குவர்க
ளவரவர் தேக முளபொழு துடனே யாதர வாரென நாடி
யவரவ ரடைத நெறிகன்யத் தடையு மாதரா வாதர வாமோ

வினையுள வளவுங் கூடியே நிற்கும் வினையகன் றிடிற்பிரிந்திடுமால், வினையினுல் வருமா தரவினி னியற்கை மெய்யுணர் வத்தகை யலவே, வினையிலை யுங்க ளிடத்தினு னிருக்க மெய்யுணர் வொன்றையே நாடி, வினையறு கானம் புகுதவே வேண்டி விரும்பினே னீர்நிலு மிங்ஙன். 12

என்றுநல் வேந்த னேதிலார் போல வேகின னனைவருங் கண்ணீர், நின்றெதிர் சொரிய வாய்விட்டே யலறி நின்றனர் தமர்கள்பின் னேகி, யின்றெமை யாவர் காத்தளித் திடுவ ரினியைநீ யேகுத னீதி, யன்றென வுரைத்தா ரவர்களை நோக்கி யரசனீ துரைத்தன னன்றே. 13

உறவாகு மெனவெணுநீர் தொடர்வதியல் பன்றுருகு முயிர்கட்கெல்லா, முறவாகு ஞானநனி பகையாகு மஞ்ஞான முய்த்துநோக்கி, னுறவான வதையடைந்து பகையான விதைநீங்கி யொருமை யாக, வுறவாத றனக்குத்தா னேயெனமற் றுறவுவிடுத் துறைபு மென்றுன். 14

தந்தைதா யிருவருந்தம் புதல்வனெனும் வாஞ்சையினுற் றும்பின் னேகி, மைந்தவா வெங்களிரு வரையுமெவர் காப்பதற்கு வைத்தாய் நீதான், சிந்தைதா னுனக்கெங்கே மகனேயுன் றிருமுகத்தைத் திரும்பிக் காட்டாய், நொந்துதான் பெற்றவயி றெரிகின்ற தெனவுரைக்க நோக்கி மன்னன். 15

அறிவைநோக் கிடிலதற்குத் தாய்தந்தை யிலையிவ்வுட லதனைநோக்கி, லிறையுநீ ருபாதான காரணமன் றிருமாயை யினிலுண்டாகுங், குறியிதுவிங் காயின்மண்ணி லெனைப்பெரு தவரிலையக் கொள்கைநீரு, நிறையுமதி யிலரோநீர் நில்லுமென விருவரையு நீத்துப் போனுன். 16

அரிவையர்க டமக்கிலக் கணங்கூறு நூலதனி லதனை யெல்லா, முரிமையதா வுடையவளா மினியமனை தொடர்ந்தேகி யுருகி நின்று, பரிவினுட னடிகள்பணிந் தரற்றியே பதைபதைத்துப் பனிகண் பாயத், தரியனுமை விடுத்துலக மதனிலொரு கணமே னுஞ் சாவே னென்முள். 17

நின்னுடைய நாயகனை நினதுள்ளே யுறநோக்கி நிற்க மாட்டா, துன்னுடைய நாயகனென் றென்றனையே கருதிநீ யுமல்வ தென்னே, மின்னனைய விடையாய்கே ளனைவருக்கு நாயகனோர் மேலா மீச, னன்னவனை யேதேடிப் போகின்றே னெனவரசற் கரிவை சாற்றும். 18

ஞானமா னதுபொதுவே நூலதனிற் றுறவதற்கு நவில்வ தில்லா, வானமா தினையலவோ விடுகவென வறையும்பதி யான வுன்னை, யீனமா விடுகவென வறையுமதோ துறவறமிங் கெனக் கென் சொல்லு, மானதா லுமையொழிந்து கதியிலையே யென வெணியா னடுத்தே னென்முள். 19

ஆகமத்தின் விதிதவறு தறைந்தனைநீ விவேகியே யாவா யானுந், தேகமுதற் பிரபஞ்ச மதனினசை விடுத்துவனஞ் செல்லா நின்றே, னுகமுலை யாயெனுரை தடுத்தலுன்றன் விரதமல நாடு தன்னிற், போகுதியென் றவளைவிடுத் தேதிலரைப் போலகன்று போகா நின்முன். 20

விரிவாய ஞானமதை யுணர்ந்தாலு மடந்தைபதி விலங்க நிற்ற, லரிதாய தகைமையினு லேங்கியே பதைபதைத்தங் கவனை நோக்கித் தரியாது கதறியே வினைதனையே நொந்து தான் றளர்ந்து நின்று, தெரியாது மறைந்தவிடந் தனின்மிகவு முருகியே தேம்பி வீழ்ந்து. 21

வேந்தனே யுனைவிடுத்து முலகமதி லிருக்கவோ விதித்தா னீசன், றீர்ந்ததோ வுமக்கெனக்கும் வினைதானு மின்றளவிற் சேர்ந்து நிற்கும், போந்தவுமை யெக்காலங் காண்பேனு னினி யெனவே புலம்பி மாதுஞ், சார்ந்தனள்பின் றிரும்பியே நகர தனின் மாதுலன்றன் சார்பு தன்னில். 22

அரசனந்த நகர்விடுத்துத் தேசநா டுகளுமகன் றடவி சென் றே, யிரவுபக லகநிலையே நிலையாக விருந்தவர்க ளிடமே சேர்ந்து, பரகுருவி னுபதேசத் தரியபொருள் வினவியவர் பகரக்

கேட்டுத், திரமனமா யொருவராற் கலங்காத ஞானியாய்த் தீர ஞகி. 23

நகர்தனி லேகிப் பிச்சை நண்ணியே மனைகடோறு
மகமகிழ்ந் தங்கை யேற்றே யவ்விடத் தருந்தி யாங்கே
செகமுளோர் பேயென் றெண்ணிச் சிரித்திட நாண மின்றி
யிகபரத் திச்சை யற்றே யேகனு யுலாவ லுற்றுன். 24

பொருந்திவா ழிடமொன் ருகிற் பொருந்திடும் பற்றென் றெண்ணி, யிருந்தில னோரி டத்து மெங்கெங்கு மொருவ ஞகித், திருந்திய சமாதி விட்டுத் திரும்பிடா துறைக்க வுன்னி, யிருந் திருந் திடங்க ளெங்கு மேகமே நோக்கி நின்றுன். 25

தோன்றிடு முலக மெங்கே தோன்றிடு மென்ன நோக்கித்
தோன்றிடு நினைவி லென்றே தோன்றிய நினைவு தானுந் [றே
தோன்றிடு மிடத்தைப் பார்த்துத் தோன்றிடுஞ் சொரூபத் தென்
தொன்றிடும் பொருள்க ளெல்லாஞ் சொரூபமே யென்று கண்
டான். 26

தோன்றிடும் பொருள்க ளுண்டாய்த் தோன்றியே யின்ப மாகித், தோன்றிடு மதனு லந்தச் சொரூபமே யென்று கண்டு, தோன்றிடுஞ் சொரூபந் தன்னிற் றோன்றுமீ தசத்தே யென்று, தோன்றிடுஞ் சொரூபந் தானுய்த் துளக்கமற் றிருந்தான் வேந் தன். 27

கடிநகர் தோறுஞ் சென்றுங் கானகந் தோறுஞ் சென்றும்
படிவல மாக வந்தும் பார்வைமா ருட்ட மின்றி
மடிவிலா மனத்த ஞகி மாசிலா நிலைமை பெற்று
முடியுடை வேந்தர் வேந்தன் முத்தியே வடிவ மானுன். 28

முத்தியே வடிவ மான முடியுடை வேந்தர் வேந்த
னெத்திசை தனக்கும் ராச னெமைவிட வேறில் லென்று
சத்திய மாக வெண்ணித் தன்னிட மதனிற் றன்னைச்
சுத்திசெய் தனைத்து மாகிச் சுயஞ்சோதி யாகி நின்றுன். 29

தன்னையே யன்றி யொன்றுந் தானுதி யாவி டத்தின்
மின்னையே யொத்த வைய மித்தைகற் பிதம தென்றும்
பொன்னையே யன்றி வேறு பூடண மிலது போல
வென்னையே யன்றி யொன்று மில்லெனத் தேர்ந்தான் வேந்தன்.

உலகினை வேற தாக வுணர்ந்திடிற் பந்த மாகு
முலகினைத் தானே யாக வுணர்ந்திடின் முத்தி யாகு
மிலகிடத் தோன்ற லெல்லா மென்னினை வேயென் றெண்ணி
யிலகிடக் கண்டு வேறற் றிருந்தன னிளமை வேந்தன். 31

ஏகசக் கரம தாக விருந்தர சாள்வோன் செல்வப்
போகமுந் திரண மாமப் போதநாட் டரசி யற்கை
யூகபுந் தியினு லாசா னுபதேசத் தாள வந்தச்
சோகமற் றிடுநா டெய்தித் தொழிலெலா முடித்தான் மன்னன்.

பந்தம்வீ டென்று மில்லை பரம்பொரு ளொன்றே யென்றுந்
தந்தஞ்சங் கற்பத் தாலே சாலமோ கிப்பர் தீயோ
ரந்தமா திகளு மில்லா வரும்பொரு ளுமே யென்று
சந்தத நோக்கி யந்தத் தற்பரந் தானே யானுன். 33

குறைவிலா நிறைவ தாகிக் குளிர்ந்தினைப் பாறி வேந்த
னிறையள வேனுந் துன்ப மின்றியே யின்ப மாகி
யுறைவிட மின்ன தென்ன வோரிட மின்றி யெங்கும்
நிறைவதே யிடமாய் நின்று னிகரின்மா ராசன் றனே. 34

எங்குமாய் நிறைந்து நின்ற வேகராச் சியம தாள்வோன்
றங்குத லின்றி யெங்குந் தானெனக் கண்ட தூயோ
னிங்குறைந் தகன்ற பாண்டத் தியல்பினெஞ் சருவம் பற்றி
யங்குரு வகற்றி நின்று னனந்தி யாகி வேந்தன். 35

அவனியி னினக்கு மேலோ ரரசனு மில்லை யிந்தத்
தவவடி வாகி யெஞ்குஞ் சரித்திட லெற்றி னுக்கோ
நவமதா யுடலி தோடே நண்ணுவ தெனையீ தன்றி
யிவனெனக் கருள வேண்டு மெனக்கறி வோங்கு மாறே. 36

பதத்தினை வேண்டின் முன்னம் பற்றிநின் றில்ல றத்தைப்
பதப்பட நிறுத்தி யேகல் பண்பதா மேலா முத்திப்
பதத்தைவேண் டிடிலோ ஞானப் பார்வையிற் கூடு நீயெப்
பதத்தினை வேண்டி யிந்தப் பரதேசி யான தென்றுன். 37

அமைவுடை யமைச்சின் மிக்கோ யடைவுடன் வினவிக்
கேட்டா, யிமையள வேனுஞ் சித்த மிதுவது மெனவோ டாது,
சமைவுடன் கேணீ சொன்ன சங்கைக்குத் தாங்க ணன்றாய்,
நமைவிட வேறோர் வேந்து நாட்டிலை யென்ப தொக்கும். 38

பதமதை வேண்டி னில்லைப் பதப்பட நிறுத்தி யேக
விதமென்ற லொக்கு முத்தி யெய்துதன் ஞானப் பார்வை
விதமதிற் றோன்று மென்றாய் விருப்பமாய்க் குடும்ப பாரத்
திதமதா யழுந்து வோருக் கெங்ஙனம் பார்வை தோன்றும். 39

மனமிரு பொருளைப் பற்ற மாட்டா தட் டாவ தான
வினமவை புறநோக் கான வேதினாற் கூடும் வீடு
கனவுண்ணேக் காகு மில்லங் கருதிய புறநோக் காகு
மனகவிவ் வூகந் தோன்ற வறைகுவ நாமே கேளாய். 40

தென்றிசை நடப்போர் கங்கை சென்றுதோய்ந் திடுவ ரோதா, னன்றியு மவனி வாழ்க்கைக் கமைச்சர்க ளுடனே காந்த, மொன்றியே யூகஞ் செய்வோ ருலகவேந் தாயி னோர்க, ணின் றிதை நோக்கா யில்லி னிற்பவர் முத்தி சேரார். 41

பாசந்தான் பகைய தாகப் பார்வைபெற் றிடிற்பா சத்தில்
பாசந்தான் வைத்துப் பின்னும் பற்றவுங் கூடு மோதான்
பாசந்தான் பகைய தென்றே பகருநூன் மட்டே கற்றோர்
பாசந்தான் விடவு மாட்டார் பரமெலா மெனவாய்ப் போக்கும்.

அந்தமா தியுமி லாவீ டடைந்துடற் பிறப்ப றுக்கச்
சுந்தர ஞானம் போதுந் துறவற மேதுக் கென்றே
மந்ததி காரி யோரை மதித்துநூ லுரைக்குஞ் செய்தி
யந்தம தான பேருக் கத்தகை விளம்பா தென்றும். 43

தோன்றுகின்ற பொருளியல்புந் தோற்றுவிக்கும் பொருளி யல்புந், தோன்றவுனக்கி யாமுரைக்கச் சோகமறவே கேட்டிடு வாய், தோன்றுபொருள்க ளநித்தமுமாய்த் தூய்மையின்றித் துக்கமுமாய்த், தோன்றுந் தோற்று விக்குபொருள் சுகமாய்ச் சுத்த நித்தமுமாம். 44

பால னான பருவம்போம் பன்னு குமாரப் பருவம்போங்
கோல மான தருணம்போங் கோலை யூன்றிக் குனிந்தெழுந்து
காலன் மாய்க்க வனைவர்களுங் கல்லென் றழுது பேர்மாற்றி
யேலப் பிணமென் றொருபெயரிட் டிடுகாட் டிடுத லொருதலையே.

கருவி னின்று மழிந்துபோங் கண்ட குழந்தை யினுங்குமரப்
பருவந் தனினும் போந்தருணப் பருவந் தனினு மழிந்துபோ
முருவ நடுங்கு மூப்பதினு மொடுங்கு மெந்தக் காலையினு
மெருவி யழிதல் வியல்பாகு முலகத் துடலின் வாழ்க்கையுமே. 46

